உ

ஸ்ரீ து.

காசிக்கலம்பகம்.

ப. சுப்ரமணியனர்.

ஸ்ரீ

# காசிக்கலம்பகம்.

[காசியென்பது *ஏழுபுண்ணிய நகருள் ஒன்று; கலம்பகம் - ஓர் பிரபந்தம்: எனவே காசியைக்குறித்துப் பாடிய ஓர்பிரபந்தமென்பது பொருள்.]

## காப்பு.

[காப்பு - இரக்ஷிப்பு; அது இங்குரக்ஷகவிஷயமான வணக்கத்துக்கு ஆகுபெயர்; ஆகவே, கவி தமக்குநேரிடத்தக்க இடையூறுகளைநீக்கித் தமது எண்ணத்தை முடிக்கவல்லதோர்பொருளின் விஷயமாகச் செய்யுந் தோத்திரமென்பது கருத்து.]

[நேரிசைவெண்பா.]

பாசத்தளையறுத்துப்பாவக்கடல்கலக்கி
நேசத்தளைப்பட்டுநிற்குமே—மாசற்ற
காரார்வரையீன்றகன்னிப்பிடியளித்த
ஓரானைவந்தெனுளத்து.

(இ-ள்.) மாசுஅற்ற - குற்றமில்லாத, கார்ஆர்வரை - மேகங்கள் நிறைந்து தங்குகின்ற இமயமலையால், ஈன்ற - பெறப்பட்ட, கன்னிபிடி - இளமையையுடைய பெண்யானை [பார்வதி], அளித்த - பெற்ற, ஓர்ஆனை - ஒப்பற்றயானை [விநாயகக்கடவுள்], என்உளத்து - என்னுடையமனததில், வநது—, பாசம் தளை - (என்னுடைய) பாசமாகிய பந்தததை, அறுத்து—, பாவம்கடல் - பாவமாகியகடலை, கலக்கி—, நேசம்தளைபட்டு - (என்னுடைய) நேசமாகிறதளையிலே [கட்டிலே] யகப்பட்டு, நிற்கும் - நிற்கின்றது, (எ-று)

இது தியானமென்னும் மனவணக்கம. இதனைல் தாம்எடுத்துக்கொண்ட இப்பிரபந்தம் இடையூறின்றி இனிது முடிதற்பொருட்டு இந்நூலாசிரியர் தமது வழிபடுகடவுளாகிய விநாயகர்வணக்கஞ்செய்தமை சொல்லப்பட்டது. பாசம் - ஆணவம், காமியம், மாயையென்பன. நேசத்தளைபபட்டுநிற்குமென்பதை "நேயத்தேநின்றநிமலன்" என்றும், "பத்திவலையிற்படுவோன்" என்றுந் திருவாசகத்துட் கூறியவாற்றானுமுணர்க. பிடி - பெண்யானை; அது "பிடியென்பெண்பெயா யானைமேற்றே" என்னும் மரபியற் சூத்திரத்தாலறிக. எல்லாவவயவங்களினும் முதன்மையாகியதலை யானைத்தலையாயிருத்தல்பற்றி விநாயகக்கடவுளை 'ஆனை' என்றார். "மழைமதக்களிறு" என்றார் பிறரும்.

---

* அயோத்தியை, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்திகை, துவாரவதி என்பன.

[மயங்கிசைக்கொச்சகக்கலிப்பா.]

க, நீர்கொண்டகடலாடைநிலமகருக்கணியான
கார்கொண்டபொழிற்காசிக்கடிநகரங்குளிர்தூங்க
இடமருங்கிற்சிறுமருங்குற்பெருந்தடங்கணின்னமிர்தஞ்
சடைமருங்கினெடுந்திரைக்கைப்பெண்ணமிர்தந்தலைசிறப்பக்
கண்கதுவுகடவுண்மணிதெரிந்தமரர்கம்மியன்செய்
விண்கதுவுபொலங்குடுமிவிமானத்தின்மிசைப்பொலிந்தோய்

உ. நிற்பனவுந்தவழ்வனவுநடப்பனவுமாய்நிலத்துக்
கற்பமளவிலகண்டுமுறுகளைகண்காணுமே
பழங்கணுறுமுயிர்கடுயர்க்கடனீத்துப்பரங்கருணை
வழங்குபரமாநந்தமாக்கடலிற்றிளைத்தாட
உரையாதபழமறையின்முதலெழுத்தினுண்பொருளை
வரையாதுகொடுத்திடுநின்வள்ளன்மைவாழ்த்துதுமே

க, நீரெழுத்துக்கொத்தவுடனீத்தார்க்குநீநவில்வ
தோரெழுத்தேமுழுதுமவரெவ்வண்ணமுணர்வதுவே

உ. என்பணிவதுடுப்பதுதோலெம்பிரான்றமர்களவர்
முன்பணியும்பேறுடையார்திசைமுகனுமுகுந்தனுமே

௩. செடிகொண்முடைப்புழுக்கூடேசிற்றடியோமிடுதிறைமற்
றடிகளடியார்க்களிப்பதாநந்தப்பெருவாழ்வே

௪. பற்பகனோற்றருந்தவரும்பெறற்கரியபரந்தாமம்
எற்புடல்விற்றளியேமுங்கொளப்பெறுவதிறும்பூதே

௫. நிணம்புணர்வெண்டலைக்கலன்கொணேரிழைமுத்தித்திருவை
மணம்புணர்வார்க்கையனருண்மணவாளக்கோலமே

௬. முடைத்தலையிற்பலிகொள்வான்மூவுலகுமவரவர்தங்
கடைத்தலையிற்றிரிவதுகொல்யாம்பெறுநின்காணியே

க. உளதெனவிலதெனவொருவரோரளவையின்
அளவினிலளவிடலரியதொருருவினை

உ. இதுவெனலருமையினெழுதருமொழிகளும்
அதுவலவெனுமெனிலெவருனையறிபவர்

௩. அவனவளதுவெனுமவைகளினுளனலன்
எவனவனிவனெனவெதிர்தருதகைமையை

௪. அறிபவரறிவினுளறிவுகொடறிவுறு
நெறியலதொருவருமறிவருநிலைமையை

௧. ஆணொடுபெண்ணுருவமைந்துநின்றனை
௨. பூண்முலைகலந்துமைம்புலனும்வென்றனை
௩. எண்வகையுறுப்பினோருருவெடுத்தனை
௪. தொன்மறைப்பனுவலின்றொடைதொடுத்தனை

௧. வடவரைகுழையவளைத்தனை
௨. மலைமகண்முலைகடிளைத்தனை
௩. விடமமிர்தமரவிளைத்தனை
௪. விசயனொடமர்செய்திளைத்தனை
௫. வரிசிலைமதனையெரித்தனை
௬. மதகரியுரிவைதரித்தனை
௭. அருமறைதெரியவிரித்தனை
௮. அலகில்பல்கலைகடெரித்தனை

௧. அழல்விழித்தனை
௨. பவமொழித்தனை
௩. ஆறணிந்தனை
௪. மாறணிந்தனை
௫. மழுவலத்தினை
௬. முழுநலத்தினை
௭. மானடத்தினை
௮. மாணிடத்தினை
௯. அலகிறந்தனை
௧0. தலைசிறந்தனை
௧௧. அருள்சுரந்தனை
௧௨. இருடுரந்தனை
௧௩. உலகளித்தனை
௧௪. தமிழ்தெளித்தனை
௧௫. ஒன்றுமாயினை
௧௬. பலவுமாயினை

௧. அலகில்பலபுவனங்களடங்கலுமுண்டொழிப்பாய்க்குக்
கொலைவிடமுண்டனையென்றுகூறுவதோர்வீறாமே
௨. பயின்மூன்றுபுவனமுங்கட்பொறிக்கிரையாப்பாலிப்பாய்க்
கெயின்மூன்றுமெரிமடுத்தாயென்பதுமோரிசையாமே
௩. அடியவரேமுக்குறும்புமறவெறிந்தாரெனிலடிகள்
விடுகணைவிற்காமனைநீவென்றதுமோர்வியப்பாமே
௪. இக்கூற்றின்றிருநாமத்தொருகூற்றுக்கிலக்கென்றால்
அக்கூற்றங்குமைத்தனையென்றிசைப்பதுமோரற்புதமே

எனவாங்கு

உலகுசூற்கொண்டதலைவியுநீயு
மலைபகவெறிந்தமழவிளங்குழவியை
அமிர்தமூற்றிருக்குங்குமுதவாய்த்தேறல்
வண்டுகினனைப்பமடித்தலத்திருத்திக்

கண்களிற்பருகியக்காமருகுழவி
எழுதாக்கிளவியின்சுவைபழுத்த
மழலைநாறமிர்தம்வாய்மடுத்துண்ணச்
செஞ்செவிநிறைத்தநம்மஞ்செவிக்கடிகளென்
புன்மொழிக்கடுக்கொளப்புகட்டினன்
இன்னருள்விழைகுவாயிரும்பூதுடைத்தே. (க)

க.—நீர்கொண்ட***பொலிந்தோய்.— (இ - ள்.) நீர் கொண்ட கடல் ஆடை நிலம் மகளுக்கு - புனலை மிகுதியாகக்கொண்டிருக்கின்ற கடலைச் சேலையாகவுடைய பூமிதேவிக்கு, அணி ஆன - அழகைத்தருவதாகிய, கார் கொண்ட பொழில் காசி கடி நகரம் - மேகங்கள் தங்கப்பெற்ற சோலையை யுடைய காசியென்கின்ற காவலையுடையநகரம், குளிர்தூங்க - குளிர்ச்சி பெற, இடம்மருங்கில் - இடப்பக்கத்தில், சிறுமருங்குல் பெருந்தடங்கண் இன்னமிர்தம் - சிறிய இடையையும் பெரியகண்களையுமுடைய இனியதேவா மிர்தம்போன்ற பார்வதிதேவியும், சடைமருங்கில் - ஜடையினிடத்தில், நெடும்திரை கை பெண் அமிர்தம் - நீண்ட அலைகளின் ஒழுங்கையுடைய கங்கா தேவியும், தலைசிறப்ப - மேன்மைப்பட்டு வீற்றிருக்க, கண்கதுவுகடவுள்மணி - (காண்பவர்) கண்களைக் கவருகின்ற தெய்வத்தன்மையையுடைய [சிறந்த] ரத்நங்களை, தெரிந்து - ஆராய்ந்தெடுத்து, அமரர்கம்மியன் - தேவர்தச்சனாகிய விசுவகர்மா, செய் - நிருமித்த, விண்கதுவுபொன் குடுமிவிமானத்தின்மிசை - ஆகாயத்தைத்தொடுகின்ற பொன்னாற்செய்த சிகரங்களையுடைய கோயிலில், பொலிந்தோய் - விளங்குகின்ற விசுவநாதா, (எ-று.)

பூமிக்கு அப்த்திமேகலா என்னும் வடமொழிப் பெயருண்மையின் நீர்கொண்டகடலாடை நிலமகளென்றார். கார் - பண்பாகுபெயர். காரிற்கும் பொழிற்குஞ் சம்பந்தமில்லாமலிருக்கச் சம்பந்தத்தைக் கற்பித்தலால் தொடர்புயர்வு நவிற்சியணி, இதனைவடநூலார் சம்பந்தாதிசயோக்தியென்பர்; விண்கதுவு பொலங்குடுமியென்பதுமது. கடி - காவல்; உரிச்சொல். இனிக்கருமைகொண்ட [இருண்ட] பொழிலென்றுமாம். குளிர் - முதனிலைத்தொழிற்பெயர். சிறுமருங்குற் பெருந்தடங்கண் - சொல்லானும் பொருளானுமறுதலைப்படத் தொடுத்த தொடைமுரண். "அகலல்குறுள்கண்ணென மூவழிப் பெருகி, நுதலடிநுசுப்பென மூவழிச்சிறுகி" என்றார்கலித்தொகையினும். கண்ணுக்கினியவளாயிருந்தலால் பார்வதியை இன்னமிர்தம் என்றார்; அமிர்தம் - இறத்தலின்மைக்குக் காரணமானது. பெண்ணமிர்தம், அமிர்தப்பெண், நீர்த்தெய்வம், கங்கை. தலைசிறத்தல் - ஒருசொல்; தலை - உபசர்க்கம்; "செயிரிற்றலைப்பிரிந்தகாட்சியாருண்ணு, ருயிரிற்றலைப்பிரிந்தவூன்" என்றவிடத்திற்போல. இனித் தலைச்சடைமருங்கிற்பெண்ணமிர்தஞ்சிறப்ப எனக் கூட்டலுமாம். மணியைக்கண்டகண் பிறிதிற் செல்லாமையால் கண்கதுவு என்றார்; "கண்வாளறுக்குங் கமழ்தாரவன்" என்றாற்போல. அமரர் - இறவாதவர். கம்மியன் - கர்மாரகனென்னும் வடமொழிச்சிதைவு; கருமான், கம்மாளன் என்பனவுமது. பொன் + குடுமி = பொலங்குடுமி, "பொன்னென்கிளவி" என்னுஞ் சூத்திரத்தானமைந்தது. விமானம் - தேவர் கோயில். பொலிந்தோய் - பொலிந்தான் என்பது இறுதியவ்வாதலாகிய விளியுருபேற்று ஆகாரம் ஓகாரமாயிற்று.

உ.—நிற்பன *** வாழ்த்துதும்.—(இ-ள்) நிற்பனவும் - அசரங்களும், தவழ்வனவும் - ஊர்வனவும், நடப்பனவும் - நடப்பவைகளும், ஆய் - ஆகி, நிலத்து - உலகத்தில், கற்பம்அளவில - எல்லையில்லாத [அநேக] கல்பகாலங்களை, கண்டும் - பார்த்தும், உறுகளைகண் - தமக்குப்பொருந்திய ரக்ஷகவஸ்துவை, காணுமே - காணுமல, பழங்கண்உறும் - துன்பத்தையடைகின்ற, உயிர்கள் - ஆத்துமாக்கள், துயர்க்கடல் - பிறவித்துன்பமாகிய சமுத்திரத்தை, நீந்தி - தாண்டி, பரங்கருணைவழங்கு பரமாநந்தமாக்கடலில் - சிறந்தஅருளினால் அளிக்கப்படுகின்ற பேரின்பமாகிய பெரியசமுத்திரத்தில், இளைத்து ஆட - அழுந்திவிளையாடும்படி, உரையாதபழமறையின் - ஒருவராலுஞ்சொல்லப்படாத அநாதியாகிய வேதங்களினுடைய, முதலெழுத்தின் - முதலக்ஷரமாகியபிரணவத்தினது, ஒள்பொருளை - சிறந்த அர்த்தத்தை, வரையாது கொடுத்திடும் - வரையாமற்கொடுக்கின்ற, நின் - உன்னுடைய, வள்ளன்மை - வள்ளற்றன்மையை [ஈகைக்குணத்தை], வாழ்த்துதும் - துதிப்போம், (எ-று)—ஏ-ஈற்றசை.

மறையாவன: தைத்திரியமும் பௌடியமும் தலவகாரமும் சாமவேதமுமாம்; இனி வேதவியாசர் வரையறைப்படுத்திய காலத்தோதுகின்ற இருக்கு யசு சாமம் அதர்வணம் என்னும் நான்குவேதமுமாம். தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்னும் எழுபிறப்புகளுள் தாவரங்களும் ஊர்வனவும் நீங்கிய பிறவற்றை நடப்பனவற்றுளடக்கிக்கூறினார். கற்பம் - பிரமனாயுள். உறு - மிகுதி, உரிச்சொல். காணுமே - மேயீற்றுவினையெச்சம். வேதம் கடவுளைப்போல நித்தியமாதலால் உரையாதபழமறையென்றார். மறை-சிலவருணந்தார்க்கு மறைக்கப்படுவது; மறைந்தபொருளை யுடையதுமாம். வரையாதுகொடுத்தல் - கைம்மாறுவேண்டாது கொடுத்தல். வள்ளன்மை, மை - தன்மைப்பொருண்மைவிகுதி. வாழ்த்துதும் - தன்மைப்பன்மை முற்று. யாம் என்னும் பயனிலை குறைந்துநின்றது; இனி யாமென்பது தோன்று எழுவாயெனக்கொண்டு வாழ்த்துதுமென்னும் வினைப்பயனிலை கொண்டதெனினும் அமையும். துயர்க்கடல், ஆநந்தமாக்கடல் என்பன உருவகவணி. எழுத்து - எழுதப்படுவதென்னும் பொருட்கண் எழுதென்னு முதனிலை யுரிச்சொல்லின்முன்னர்ச் செயப்படுபொருண்மை யுணர்த்தும் ஐகாரவிகுதிபுணர்ந்து, "செய்யாயென்னு முன்னிலை வினைச்சொல்" என்னுஞ் சூத்திரத்து மொழிந்த பொருளோடொன்ற வவ்வயின்மொழியாததனை முட்டின்று முடித்தலென்னு முத்தியால் அவ்வைகாரங்கெட்டுக், கெட்ட வழித் தகரமிரட்டித்து எழுத்தெனமுடிந்தது. இவ்வாறன்றி எழுதென்னு முதனிலை எழுத்தெனத்தானேதிரிந்ததென்றும், அஃதாகுபெயராற் செயப்படுபொருளை யுணர்த்திற்றென்றுங்கூறுவாருமுளர். அது பொருந்தாது, ஒருகாரணமின்றித்திரிதல் கூடாமையானும், நட வா கரு சே முதலியமுதனிலை யெல்லாம் விகுதியோடன்றித் தனித்தியங்கலாற்றாமையானும், இம்முதனிலைகளுரிச்சொல்லாகலிற் பெயர்த்தன்மைப்பட்டுழியல்லது ஆகுபெயராதற் கேலாமையானுமென்பது. பிறவித்துன்பங்களாவன,—தன்னைப்பற்றி வருவனவும், பிறவுயிர்களைப்பற்றி வருவனவும், தெய்வத்தைப்பற்றி வருவனவுமாம். இவற்றை வடநூலார் ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்பர். ஆத்யாத்மிகமென்பது - சரீரத்தைப்பற்றி வருந் தலைநோய் முதலியவும், மனத்தைப்பற்றிய காமக்ரோதம் முதலியவுமாம். ஆதிபௌதிகமென்பது - மனிதர், விலங்கு, பிசாசு முதலியவற்றால் நேர்வதாம். ஆதிதைவிகமென்பது - காற்று, மழை, இடி, வெயில் முதலியவற்றால் நேர்வதாம்.

இவையிரண்டும் ஆறடித்தரவுகள்.

க.—நீரெழுத்து***உணர்வதுவே.—(இ-ள்.) நீர் எழுத்துக்கு ஒத்தஉடல்-நீரிலெழுதிய எழுத்துப்போன்றநிலையில்லாத உடம்பை, நீத்தார்க்கு - விட்ட முக்தர்களுக்கு, நீநவில்வது - நீஉபதேசிப்பது, ஓர் எழுத்தே - ஏகாக்ஷர மான பிரணவமொன்றே, (ஆயினும்), அவர் - அம்முக்தர், முழுதும் உணர்வது - எல்லாவற்றையும் ஒருங்கறிதல், எவ்வண்ணம் ஏ - எப்படியோ (அது வியக்கத்தக்கது), (எ-று.)

" நீரில் எழுத்தாகும்யாக்கை" என்றார் நீதிநெறிவிளக்கத்தினும்.

உ.—என்பு***முகுந்தனுமே —(இ-ள்.) எம்பிரான் - எங்கள்தலைவனே, அணிவது - நீஆபரணமாகப்பூணுவது, என்பு - எலும்பு, (ஆகும்), உடுப்பது - ஆடையாகச்சாத்திக்கொள்வது, தோல் - யானைத்தோலும் புலித்தோலும் (ஆகும்), தமர்களவர் - (உன்னுடைய) பக்தர்கள், திசைமுகனும் - நான்குமுகங்களையுடைய பிரமனும், முகுந்தனும் - விஷ்ணுவும், முன்பணியும் பேறுஉடையார் - எதிரில் வந்துவணங்கத்தக்க பாக்கியத்தையுடையவர்கள், இது என்னவியப்பு? (எ-று.)

அவர்-பகுதிப்பொருள்விகுதி. இனி, எம்பிரானுடையதமர்கள் சாரூப்பியத்தால்அணிவதுஎன்பு, உடுப்பது தோல், (ஆயினும்), அவரைச்சிறப்பாகப்பணியும்பேற்றையுடையவர்கள் திசைமுகனுமுகுந்தனுமேயன்றி எம்போலியரல்லர் ; இதுஎன்னவியப்பெனக்கூட்டியுரைக்கலுமாம். திசை - நான்கென்னும் எண்ணையுணர்த்திநின்றது. முகுந்தன் என்னும் பதத்துக்குத்தன்னையடைந்தவர்களுக்கு இவ்வுலகவின்பத்தையும், வீட்டுலகவின்பத்தையுங்கொடுப்பவனென்பதுபொருள். இதனால் இவன்பெருமை தெற்றெனவிளங்குகின்றது.

ங.—செடிகொள்***வாழ்வே.—(இ-ள்.) சிற்றடியோம் - அற்ப அடிமைகளாகிய நாங்கள், இடுதிறை - சமர்ப்பிக்கின்றபொருள், செடி கொள்முடை புழுகூடே - மிகுதியைக்கொண்ட முடைநாற்றத்தையுடைய புழுக்களுக்கு இருப்பிடமாகிய (அற்ப) வுடம்புதான், (ஆயினும்) அடிகள் - தலைவனாகிய நீ, அடியார்க்கு - பக்தர்களுக்கு, அளிப்பது - கொடுப்பது, ஆநந்தப்பெருவாழ்வே - பேராநந்தத்தோடு கூடிய வீட்டுலகவாழ்க்கையே, இதுஎன்ன வியப்பு? (எ-று.)

மற்று - வினைமாற்றில் வந்தது. இனிசெடிபாவமுமாம் ; "செடியாராக்கை" என்றார் பெரியாரும்.

ச.—பற்பகல்***இறும்பூதே.—(இ-ள்.) அருதவரும்-செய்தற்கரியதவத்தையுடைய முனிவர்களும், பற்பகல் நோற்று - பலகாலம் தவஞ்செய்து, பெறற்கரிய - அடைவதற்கருமையான, பரந்தாமம் - பரமபதத்தை, அளியேமும் - எளியவராகிய நாங்களும், என்பு உடல் விற்று - எலும்பினாகிய சரீரத்தைக்கிரயமாகக்கொடுத்து, கொளப்பெறுவது - அடையப் பெறுதல், இறும்பூதே - அதிசயமே, (எ - று.)

பற்பகல் - அகரங்கெட லகரம் றகரமாயிற்று. நோற்று, நோல் - பகுதி. பரந்தாமம் - மேலானஇடம். எற்புடல் - மென்றொடர் வன்றொடராயிற்று, அருந்தவரும், அளியேமும் என்பவற்றும்மை முறையே உயர்வுசிறப்பும், இழிவு சிறப்பும் ஆம்.

ரு.—நிணம்***கோலமே.—(இ - ள்.) நேரிழை முத்தித்திருவை - அழகிய ஆபரணங்களையணிந்த முத்திச்செல்வியை, மணம் புணர்வார்க்கு - கல்

யாணஞ்செய்பவர்களுக்கு [முக்தர்களுக்கு], ஐயன் அருள் மணவாளக்கோலம் - பெருமையிற்சிறந்த நீகொடுக்கின்ற கல்யாணத்துக்குரிய வலங்காரம், நிணம் புணர் வெண்டலைக்கலன் கொல் - கொழுப்புப்பொருந்தியவெள்ளிய தலையோடாகியவாபரணமோ, இது என்ன வியப்பு? (எ - று.)

கொல் - ஐயப்பொருளது. மணவாளக்கோலம் - புதுமணவாளப்பிள்ளைக்குரியவாபரணம்.

சு.—முடை***காணியே.—(இ-ள்.) யாம் பெறு நின்காணி - நாங்கள் அடைகின்றஉன்னுடைய உரிமை[காணியாட்சி],முடைத்தலையிற் பலிகொள்வான் - நாற்றத்தையுடைய தலையோட்டில் பிச்சையெடுக்க, மூவுலகும் - மூன்றுலோகங்களிலும், அவர் அவர்தம் கடைத்தலையில் - அவரவர்தலைவாயிலில், திரிவதுகொல் - அலைவதுவோ? (எ - று.)

மூவுலகாவன - சுவர்க்கலோகம், பூலோகம், பாதாளலோகம் என்பன; அல்லது, கிருதகம், அகிருதகம், கிருதகாகிருதகமென மூவகைப்பட்ட வுலகமுமாம். கிருதகம் என்றால் செய்யப்பட்டது, பூமிபாதாள முதலாயின. அகிருதகம் என்றால் செய்யப்படாதது, தபோலோக சத்தியலோகங்கள். கிருதகாகிருதகம் என்றால் செய்யப்பட்டதும் செய்யப்படாததுமாயிருப்பது, சொர்க்கலோக முதலியன.

கொள்வான் - வானீற்று வினையெச்சம்.

ஏகாரங்கள் வியப்பைக்குறிக்கின்றன.

இவையாறும் ஈரடித்தாழிசைகள்.

க.—உளதெண***ருருவினே.—(இ-ள்.) உளதுஎன - உள்ளதென்றும், இலதுஎன - இல்லாததென்றும், ஒருவர் - ஒருத்தர், ஓர்அளவையின் - ஒருபிரமாணத்தினால், அளவினில் - வரையறையில், அளவிடலரியது - மதித்தற்கருமையான, ஓர் உருவினே - ஒருருபத்தை யுடைத்தாயிருக்கிறாய், (எ - று.)

அளவைகளாவன-பொறிகளாற்காணுங்காட்சியும், குறிகளான் உய்த்துணருமநுமானமும், கருத்தாமொழியாகியவாகமமும் என மூன்று. ஒப்புப்பற்றியுணரும்உவமையும், இங்ஙனம் அன்றாயின் இது கூடாதென்றுணரும் அருத்தாபத்தியும், உண்மைக்குமாறாய இன்மையுமென இவற்றையுங்கூட்டி ஆறென்பாருமுளர். இவையும் ஒருவாற்றான் அவற்றுள்ளே யடங்குதலின், மூன்றென்றலே கருத்து. ஐதிகம், சம்பவம் என்பனவற்றையுங்கூட்டி எட்டென்பாரும் உளர். அவையாவன, காணல் - காட்சி; புகையைக்கண்டு நெருப்புண்டெனல் - அநுமானம்; மரை பசுப்போலெனல் - உவமானம்; பெரியோர் வாய்ச்சொல் - ஆகமம்; பகலுண்ணான் பருத்திருப்பானென்புழி இரவிலொளித்துண்பானெனவுணர்தல் - அருத்தாபத்தி; முன்னுமில்லை, பின்னுமில்லை, ஒன்றிலொன்றில்லை, ஒருகாலத்து மில்லையெனல் - அபாவம்; இம்மரத்திற் பேயுளதென்பது - ஐதிகம்; ஆயிரத்தில்நூறுண்டெனல் - சம்பவம். உரு-ரூபமென்னும் வடமொழிச்சிதைவு. என என்னும் இடைச்சொல் எண்ணொடியைந்தது. ஓரளவை - விகாரம்.

உ.—இதுவென***அறிபவர்.—(இ - ள்.) இதுஎனல் அருமையின் - (குடத்துள்விளக்கும் உறையுள்வாளும்போல்) இது வென்றறிவிக்க முடியாமையால், எழுதருமொழிகளும் - எழுதமுடியாத வேதங்களும், அது அல எனுமவெனில் - அது (அது) வல்லஎன்றுகூறுமென்றால், உனைஅறிபவர் - உன்னை

யறியுந்தன்மையை யுடையவர்கள், எவர் - வேறேயாவரோ? (ஒருவருமில்லை), (எ - று.)

எழுதாக்கிளவியென வேதத்திற் கொருபெயருண்மையான் எழுதருமொழியென்றார். உம்மை - சிறப்பு. வினாவடியாகப்பிறந்த எவரென்னும் பெயர் இங்கு இன்மைகுறித்து நின்றது.

௩.—அவனவ * * * தகைமையை.—(இ - ள்.) அவன் அவள் அது எனுமவைகளின் - அவன் அவள் அது என்னும் ஆண்பால் பெண்பால் ஒன்றன் பால்களில், உளன் அலன் - உள்ளவனல்லாதவன், எவன் - யாவனோ, அவன் இவன் - அப்படிப்பட்டவன்தான் இக்கடவுள், என எதிர்தருதகைமையை - என்றுதோன்றுகின்ற தன்மையை யுடைத்தாயிருக்கிறாய், (எ - று.)

கடவுள் ஒருவராதலின் ஒருமைப்பால்களைக் கூறினார். என - என்னெனும் இடைச்சொல்லடியாகப் பிறந்தசெயவெனெச்சம் ; அதுஇங்கேவினையோடியைந்தது. தகைமை - பெருமையுமாம்.

௪.—அறிபவ***நிலைமையை.—(இ-ள்.) அறிபவர் - அறியத்தொடங்குமவர், அறிவினுள்-அறியுங்காலத்தில், அறிவுகொடு - (தமது) அறிவைக்கருவியாகக்கொண்டு, அறிவுறுநெறியலது - அதனளவாக அறிகின்ற வழியல்லாமல், ஒருவரும் - ஒருத்தரும், அறிவரும் நிலைமையை - (பூர்ணமாக) அறிவதற்கசாத்தியமானதன்மையை யுடைத்தாயிருக்கிறாய், (எ - று.)

அறிவுகொடு - அறிவினால். கொண்டென்னுஞ்சொல்லுருபு கொடுவெனத் தொக்கு நின்றது. ஒருவரும் - முற்றும்மை.

இவைநான்கும் ஈரடிஅராகங்கள்.

க.—ஆணொடு* * *நின்றனை.—(இ - ள்.) ஆண் (உரு) ஒடு - ஆண் மகனுடைய ரூபத்தோடு, பெண்உரு - பெண்மகளுடையரூபமும், அமைந்துநின்றனை - பொருந்திஇருக்கிறாய், (எ - று.)

உரு என்பதனை ஆணொடுங்கூட்டுக. பரமசிவன் அர்த்தநாரீசுவரனாதலால் இவ்வாறு கூறினார். ஆணுரு - வலப்பாகமாகியசிவரூபம்; பெண்ணுரு - இடப்பாகமாகிய சத்தி [பார்வதி] ரூபம்.

உ.—பூண்முலை* * *வென்றனை.—(இ - ள்.) பூண்முலை - ஆபரணங்களையணிந்த தனங்களையுடைய பார்வதியோடு, கலந்தும - சேர்ந்தும், ஐம்புலன் உம் - பஞ்சேந்திரியங்களையும், வென்றனை - சயித்தாய், (எ - று.)

பூண்முலை - இரண்டாம்வேற்றுமைத்தொகை நிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகை. ஐம்புலன் - மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன.

௩.—எண்வகை* * *எடுத்தனை.—(இ - ள்.) எண்வகை உறுப்பின் - எட்டு விதமான அவயவங்களையுடைய, ஒருரு - ஒருரூபத்தை, எடுத்தனை - தரித்தாய், (எ - று.)

எண்வகையுறுப்பாவன:—நிலம், நீர், தீ, காற்று, விசும்பு என்னும் பஞ்சபூதங்களும், சூரியனும், சந்திரனும், ஆத்துமாவும் ஆம் ; "நிலநீர்நெருப்புயிர் நீள்விசும்புநிலாப்பகலோன், புலனாயமைந்தனோடெண்வகையாய்ப்புணர்ந்து நின்றான்" என்றார் திருவாசகத்தினும். அஷ்டமூர்த்தியென்னும்வடமொழிப் பெயரும் இதுபற்றியேவந்ததெனவறிக.

௪.—தொன்மறை***தொடுத்தனே.—(இ - ள்.) தொல்மறைபனுவல் - பழைய வேதநூலாகிய, இன்தொடை - இனியமாலையை, தொடுத்தனை - கட்டினாய், (எ - று.)

பனுவலின்றொடை - நூலினதுதொகை யென்றுமாம். வேதங்கள் நித்தியமாயினும் கடவுள் வெளிப்படுத்தினமைபற்றி இவ்வாறுகூறினார். தொடை - தொடுக்கப்படுவது ; ஐ - செயப்படுபொருள்விகுதி.

இவைநான்கும் நாற்சீர் ஓரடி அம்போதரங்கம்.

௧.—வடவரை***வளைத்தனே.—(இ - ள்.) வடவரை - மேருபர்வதத்தை - குழைய - (வில்லாக) வளையும்படி, வளைத்தனை - வளைத்தாய், (எ-று.)

வடவரை - மேருபர்வதம்; வடக்கிலுள்ளமலை. இது திரிபுரசம்ஹாரநிமித்தமாக வளைக்கப்பட்டது. மலையைவளைத்தல் அகடிதகடநாசாமர்த்தியம்.

௨.—மலைமகண்***திளைத்தனே.—(இ - ள்.) மலைமகள்முலைகள் - பார்வதியினுடைய தனங்களை, திளைத்தனை - அனுபவித்தாய், (எ - று.)

இமையமலையின் மகளாதலின் மலைமகளென்றார். இது பார்வதியென்னும் வடசொல்லின்மொழிபெயர்ப்பு.

௩.—விடமமிர்***விளைத்தனே.—(இ - ள்.) விடம் - (திருப்பாற் கடலைக்கடையுங்காலத்துண்டாகிய) விஷம், அமிர்துஅமர - அமிர்தம்போல (தீங்குசெய்தலின்றிக் கழுத்தில்) பொருந்தி நிற்கும்படி, விளைத்தனை - செய்தாய், (எ - று.)

அமிர்து - அம்ருதமென்னும் வடமொழிச்சிதைவு; அது அமிழ்தம், அமிழ்து, அமுதம், அமுது என்றும்சிதைந்து வழங்கும்.

௪.—விசயனொ***திளைத்தனே.—(இ - ள்.) விசயனொடு - அர்ச்சுனனோடு, அமர்செய்து - யுத்தஞ்செய்து, இளைத்தனை - இளைத்தாய், (எ - று.)

விசயன் என்பது அருச்சுனன்பெயர்களுள் ஒன்று; மிகுந்த ஜயத்தையுடையவனென்பதுபொருள். அது சிவனைவென்றமையானும், காண்டவதகனத்தில் அக்நிக்குத்துணையாய்த் தேவரைவென்றமையானும்உண்டானது.

௫.—வரிசிலை***யெரித்தனே.—(இ - ள்.) வரிசிலைமதனை - கணுக்கோடுகளையுடைய கருப்புவில்லைத் தாங்கிய மன்மதனை, எரித்தனை - (நெற்றிக்கண்ணினெருப்பால்) எரியச்செய்தாய், (எ - று.)

மதன் - மதநனென்பதன் விகாரம் ; மன்மதனென்பதன்விகாரமுமாம்.

௬.—மதகரி***தரித்தனே.—(இ - ள்.) மத கரி உரிவை - மதத்தையுடைய யானையின்தோலை, தரித்தனை - உடுத்திக்கொண்டாய், (எ-று.)

கரம் - கை, துதிக்கை; அதனையுடையது கரி. உரிவை - உரிக்கப்படுவது. தாருகாவனத்து முனிவர்கள் பரமசிவனைக் கொல்லவேண்டுமென்று செய்த யாகத்திலுண்டாகிவந்த யானையைத் தோலையுரித்தாரென்பது புராணகதை.

௭.—அருமறை***விரித்தனே.—(இ - ள்.) அருமறை - (அறிதற்கு) அரிய வேதங்களை, தெரிய - (எல்லாரும்) அறியும்படி, விரித்தனை - விவரித்தாய். (எ-று.)

௮.—அலகில்பல***டெரித்தனே.—(இ - ள்.)அலகுஇல்பல்கலைகள் - அளவில்லாத பலசாஸ்திரங்களை, தெரித்தனை - தெரிவித்தாய், (எ - று)

இவையெட்டும் முச்சீரோரடி அம்போதரங்கம்.

க.—(இ - ள்.) அழல்விழித்தனை - (மதனனைக்காய்வதற்கு) அக்கினிமயமாகியநெற்றிக்கண்ணைத்திறந்தாய், (எ - று.)

உ.—(இ - ள்.) பவம்ஒழித்தனை - பிறப்பை விட்டாய், (எ - று.)

கடவுள் பிறப்பிறப்பில்லாது நித்தியராதலின் இவ்வாறுகூறினர். இனி உன்னை யடைந்தவருடைய பிறப்பைப்போக்கி முத்தியளித்தாயென்றுமாம்.

ந.—(இ - ள்.) ஆறு அணிந்தனை - கங்காநதியை (சடையிலே) தரித்தாய், (எ - று.)

ச.—(இ - ள்.) மால்தணிந்தனை - மயக்கம்நீங்கப்பெற்றாய், (எ - று.)

மால் என்பது மற்றைக் காமம் வெகுளியென்னுங் குற்றங்களுக்கும் உபலக்ஷணம்.

ரு.—(இ - ள்.) மழுவலத்தினை - மழுவென்னும் ஆயுதத்தை வலக்கையிலுடைத்தாயிருக்கிறாய், (எ - று.)

சா.— (இ-ள்.) முழுநலத்தினை - எல்லாநன்மையையும் உடைத்தாயிருக்கிறாய், (எ - று.)

எ.— (இ-ள்.) மால்நடத்தினை - பெருமையையுடைய திருநடனத்தையுடைத்தாயிருக்கிறாய், (எ - று.)

திருமாலையிடபமாக்கொண்டு செலுத்தினாய் எனவும்பொருள் கொள்ளலாம்.

அ.— (இ-ள்.) மான்இடத்தினை - மானை இடக்கையிலுடைத்தாயிருக்கிறாய், (எ-று.)

மான் - தாருகாவனத்து முனிவர்களால் ஏவப்பட்டது.

கூ.— (இ-ள்.) அலகு இறந்தனை - தியானிப்பவரெண்ணத்தைக்கடந்திருக்கிறாய், (எ - று.)

அளவற்ற குணங்களையுடைத்தாயிருக்கிறாயென்றுமாம்.

கo.— (இ-ள்.) தலைசிறந்தனை - மிகவும்மேன்மைப்பட்டிருக்கிறாய், (எ-று.)

கக.— (இ-ள்.) அருள்சுரந்தனை - கிருபை நிறைந்திருக்கிறாய், (எ - று.)

அருளாவது-தொடர்பு பற்றாது இயல்பாக எல்லாவுயிர்கண்மேலுஞ்செல்வதாகியகருணை.

கஉ.—(இ-ள்.) இருள்துரந்தனை - உன்னையடைந்தவர்க்கு நரகத்தை ஓட்டினாய், (எ - று.)

கீழுலகத்துள் திணிந்த இருளையுடைத்தாய்த் தன்கட்புக்கார்க்குத்துன்பஞ்செய்வதோர் நரகத்தை ஆகுபெயரால் இருளென்றார்; அது தாமிஸ்ரம்.

கந.— (இ-ள்.) உலகு அளித்தனை - உலகங்களை (சத்தியாய்ப்) படைத்தாய், (எ - று.)

கச.— (இ-ள்.) தமிழ்தெளித்தனை - (அகத்தியனார்க்குத்) தமிழ்ப்பாஷையைத்தெரிவித்தாய், (எ - று.)

திரமிளமென்பது தமிழெனத்திரிந்தது. தனிமைப்பொருள்குறித்த தமியென்னும் வினையடியாற்பிறந்து, வினைமுதற்பொருண்மை உணர்த்திய விகுதி குன்றித், தனக்கிணையில்லாப் பாஷையெனப்பொருள் பயப்பதென்பாரும், செவிக்கினிமைபயத்தலான் மதுரமென்னும்பொருட்பேறுடைத்தாகித் தமிழெனவழங்கியதென்பாரும் உளர். "ஆதியிற்றமிழ்நூலகத்தியர்க்குணர்த்திய, மாதொருபாகனைவழுத்துதும்" எனவும்; "வடமொழியைப்பாணினிக்குவகுத்

ருளியதற்கிணையாத், தொடர்புடைய தென்மொழியையுலகமெலாந் தொழு தேத்தக், குடமுனிக்குவற்புறுத்தார்கொல்லேற்றுப்பாகர்" எனவுந் தமிழிற்கு ஈச்வரோதப்பத்தி கூறப்படுதலால் இவ்வாறு கூறினார்.

கரு.—(இ-ள்.) ஒன்றும் ஆயினை - ஒன்றாகவும் ஆனாய், (எ - று.)

தனக்கொப்பது வேறொன்றில னென்பதுகருத்து. உம்மை-எதிரதுதழீஇய வெச்சவும்மை.

கசு.— (இ - ள்.) பலவும் ஆயினை - அநேகமும் ஆனாய், (எ - று.)

எல்லாவற்றிலுமந்தர்யாமியாயிருத்தலால் இவ்வாறு கூறினார். உம்மை - இறந்ததுதழீஇய வெச்சவும்மை.

இவைபதினாறும் இருசீரோரடி அம்போதரங்கம்.

க.—அலகில்***வீறாமே.—(இ-ள்.) அலகில்பலபுவனங்கள் - அளவில்லாத பல வுலகங்களை, அடங்கலும் - முழுதும், உண்டு ஒழிப்பாய்க்கு - புசித்து அழிக்கிறவுனக்கு, கொலைவிடம் - கொல்லுதற்றொழிலையுடைய விஷத்தை, உண்டனை - புசித்தாய், என்று கூறுவது - என்று சொல்லுவது, ஓர் வீறு ஆம் ஏ - ஒருபெருமையாகுமோ? (எ - று.)—[ஆகாதென்றபடி.]

உ.— பயில்***இசையாமே.—(இ-ள்.) பயில் மூன்று புவனமும் - பொருந்திய மூன்று உலகங்களையும், கண்பொறிக்கு - நெற்றிக்கண்ணிலுள்ள அக்கினிக்கு, இரையா - ஆகாரமாக, பாலிப்பாய்க்கு - செய்விக்கிற வுனக்கு, எயில் மூன்றும் - திரிபுரங்களையும், எரிமடுத்தாய் - தீநிறையச்செய்தாய், என்பதும் - என்றுசொல்லுவதும், ஓர் இசைஆம்ஏ - ஒரு பெருமையாகுமோ? (எ - று.)—[ஆகாதென்றபடி.]

இருப்புமதில், வெள்ளிமதில், பொன்மதில் இவையேமுப்புரமாதலின் எயின்மூன் றென்றார்.

ங.—அடியவரே***வியப்பாமே.— (இ-ள்.) அடியவரே - (உன்னுடைய) பத்தர்களே, முக்குறும்பும் - மூன்றுகுறும்புகளையும், அற எறிந்தார் எனில் - நீங்கும்படி வெட்டினாரென்றால், அடிகள் - சுவாமியே, (அவற்றுள் ஒன்றைப் பற்றிய) விடுகணைவில்காமனை - எய்கின்ற புஷ்பபாணங்களையுடைய கருப்புவில்லையுடையமன்மதனை, வென்றதும் - (நீ) சயித்ததுவும், ஓர்வியப்புஆம் ஏ- ஒருஅதிசயமாகுமோ? (எ - று.)—[ஆகாதென்றபடி.]

ஏகாரங்கள் - முறையே இழிவுசிறப்பும், எதிர்மறையுமாம். முக்குறும்பு - காமம், வெகுளி, மயக்கம்.

ச.—இக்கூற்றின்***அற்புதமே.—(இ-ள்.) இக்குஊற்று இன்திருநாமத்து- கருப்பஞ்சாற்றுப்பெருக்குப்போலினிய (நினது) ஆயிரந்திருப்பெயர்களுள், ஒருகூற்றுக்கு - ஒருசொல்லுக்கு, இலக்கு என்றால் - எதிரென்றால், அக்கூற்றம் - அந்தயமனை, குமைத்தனை - குழையப்பண்ணினாய், என்று இசைப்பதும் - என்று சொல்லுவதும், ஓர் அற்புதம்ஏ - ஒருவியப்போ? (எ - று.)—[அன்றென்றபடி.]

திருநாமங்களுள் ஒன்றையோதினவர் யமனை வென்று முத்திபெறுகின்றமையால் ஒருகூற்றுக்கிலக்கென்றார். இலக்கு - லக்ஷியமென்னும் வடமொழிச்சிதைவு. கூற்றம் - கூற்று, உடலையும் உயிரையும் வேறுபிரித்துக்கூறுபடுத்துவது; அம் - அசை.

ஏகாரங்கள் எதிர்மறைப் பொருளன.

இவைநான்கும் ஈரடித் தாழிசைகள்.

எனவாங்கு—அசை. [இது தனிச்சொல்.]

உலகு***உடைத்தே.—(இ-ள்.) உலகு சூல் கொண்ட தலைவி உம் - உலகங்களைக்கர்ப்பத்திலே கொண்டபார்வதியும், நீஉம் - நீயும், மலைபகஎறிந்த மழஇளமைகுழவியை-கிரௌஞ்சமலையைப்பிளவுபடும்படி அம்பெய்தமிகவும் இளமையையுடைய குழந்தையாகிய சுப்பிரமணியனை, அமிர்தம் ஊற்று இருக்கும் குமுதம்வாய்தேறல் - அமிர்தம்போன்ற இனிமை ஊறியிருக்கின்ற ஆம்பல் மலர்போன்ற வாயிலிருந்து வழிகின்ற தேன்போலினிய எச்சில், வண்துகில் நனைப்ப - வளத்தையுடைய ஆடையை நனைக்கும்படி, மடித்தலத்து இருத்தி - மடியினிடத்தில் வைத்துக்கொண்டு, கண்களில் பருகி - கண்களாற்குடித்து, அ காமரு குழவி - அந்த விரும்புகின்ற குழந்தையினுடைய, எழுதாக்கிளவி இன்சுவைபழுத்த-வேதங்களின் இனிய இரசம் பொருந்திய, மழலை நாறு அமிர்தம் - குதலைச்சொல்லாகிய மணக்கின்ற அமிர்தத்தை, வாய்மடுத்து உண்ண - நிறையப்புசிக்கும்படி, செம் செவி நிறைத்த-மிகவும் அழகாக நிறையச்செய்த, நும் அம் செவிக்கு - உங்கள்அழகிய காதுகளுக்கு, அடிகள் - சுவாமியே, என்புன்மொழிகடு - எனது அற்பச்சொற்களாகிய விஷத்தை, கொளபுகட்டினன் - ஏற்றுக்கொள்ளும்படி பருகச்செய்தேன், இன் அருள் விழைகுவாய் - (அதனை) இனியகிருபையினால் விரும்புவாய்,இறும்பூது உடைத்தே - (நான்செய்ததொழில்) அதிசயத்தையுடையதே, (எ-று.)

உலகமென்பது பலபொருளொரு சொல்லாய் நிலத்தையு முயிர்களையு மொழுக்கத்தையு முயர்ந்தோரையு முணர்த்தி நிற்குமேனும், ஈண்டுச்சூற்கொண்டவென்றதனான் உயிர்கண்மேனின்றது. உலகு - உலகமென்பதன் விகாரம். உலகமாதாவாதலால் பார்வதியை உலகுசூற்கொண்ட தலைவியென்றார். பரசுராமனும் சுப்பிரமணியனும் சிவபெருமானிடத்தில் வில்வித்தை கற்றபின்பு உயர்வுதாழ்வறிதற்குக் கிரௌஞ்சமலையைத் துளைத்ததனால் மலைபகவெறிந்தமழவிளங்குழவி யென்றார். மழவிளம் - ஒருபொருட்பன்மொழி. குழந்தைகளுக்கு வாயிலிருந்து எச்சில்வழியுமாதலால், அமிர்தமூற்றிருக்குங்குமுதவாய்த்தேற லென்றார்; "தாலியைம்படைதழுவுமார்பிடை, மாலைவாயமுதொழுகுமக்களை" என்றார் கம்பரும். கண்களிற்பருகுதல் - ஆசைதீரநோக்குதல். காமரு - காமர் என்பதன் விகாரம்; காமமரு என்பதன் விகாரமுமாம். ஒருவராலும்செய்யப்படாததென்பதுதோன்ற எழுதாக்கிளவி யென்றார். மழலை - நிரம்பா மென்சொல். வாய்மடுத்துண்ணல் - நிரம்பக்கேட்டல்; வாய் - உபஸர்க்கம். "மக்கண்மெய்தீண்டலுடற் கின்பமற்றவர், சொற்கேட்டலின்பஞ்செவிக்கு," "குழலினிதியாழினிதென்பதம்மக்கண், மழலைச்சொற்கேளாதவர்" என்று சிறப்பித்துச்சொல்லப்படுதலால் மழலைநாறமிர்தம் என்றார். செஞ்செவி, செவி - செவ்வியென்பதன் விகாரம். செம்செவி - ஒருபொருட்பன்மொழி. பாற்கடலுட்பிறந்த விஷத்தை யமிர்தம்போ லுண்டலால் இன்னருள்விழைகுவா யென்றார். இறும்பூதுடைத்துஎன்பதற்கு அதிசயத்தைப்போக்கியென்றுமாம்.

இது பத்தடிநேரிசையாசிரியச் சுரிதகம்.

இப்பாட்டு தரவும் தாழிசையும் அராகமும் அப்போதரங்கமும் தாழிசையும் தனிச்சொல்லும் சுரிதகமும்பெற்றுவந்த மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா.

[நேரிசைவெண்பா.]

உடையாளகிலேசர்க்கோங்குமூலக்கோட்டின்
அடையாளமிட்டுவையாளானல்—கடையிலவர்
செவ்வண்ணம்பெற்றார்திரளொடுநிற்கின்றாரை
எவ்வண்ணங்கண்டிறைஞ்சுவேம்.

(இ-ள்.) அகிலேசர்க்கு - விசுவநாதருக்கு, உடையாள் - தேவியாகிய
விசாலாட்சி, ஓங்குமலைக்கோட்டின் - உயர்ந்தமலைச்சிகரம்போன்ற தனது
தனத்தினால், அடையாளம் இட்டுவையாள்ஆனால் - அடையாளம் அணிந்து
வைக்காதவளாயினால், கடையில் - முடிவில், அவர்செவ்வண்ணம் பெற்றார்
திரளொடு - (சாரூப்பியத்தால்) அவருடைய நல்லதன்மையைப் பெற்றமுத்
தர்களுடைய கூட்டத்தோடு, நிற்கின்றாரை - நிற்கின்ற அக்கடவுளை, எவ்
வண்ணம் - எப்படி, கண்டு - பார்த்து [வேறுபாடறிந்து], இறைஞ்சுவேம் -
(நாம்) வணங்குவோம், (எ - று.)

அகிலேசர்=அகில+ஈசர், குணசந்தி. கோடு - யானைக்கொம்பும், நுனி
யுமாம். அடையாளம் - தழும்பு. இட்டுவைத்தல் - ஒருசொல்லின்றன்மை
யது. ஆனால் - ஆயினாலென்பதன் விகாரம். செவ்வண்ணம் - செந்நிறமு
மாம். கடையிலவர் - அழிவில்லாதவருமாம். எவ்வண்ணம் - வினா எதிர்ம
றையையுணர்த்திநின்றது. (உ)

[நாரைவிடுதூது. கட்டளைக்கலித்துறை.]

இறைவளைக்காகம்பரிந்தளித்தாரகிலேசர்கொன்றை
நறைவளைக்குமுடியாரடிக்கேகங்கைநன்னதியின்
துறைவளைக்குங்குருகீர்குருகீரொன்றுதூமொழிகைக்
குறைவளைக்குமுங்கள்பேரிட்டதாற்சென்றுகூறிடுமே.

(இ-ள்.) கங்கைநல்நதியின் - கங்கையென்னுஞ்சிறந்த [புண்ணிய] நதி
யினுடைய, துறைவளைக்கும் - கரையைச் சூழ்ந்திருக்கின்ற, குருகீர் - நாரை
களே, தூமொழிகைக்குஉறைவளைக்குஉம் - பரிசுத்தமாகிய சொற்களையு
டைய இப்பெண்ணினது கையிலுள்ள வளையலுக்கும், உங்கள்பேர் - உங்
களுடைய (குருகென்னும்) பெயர், இட்டது - இடப்பட்டது, ஆல் - ஆத
லால், இறைவளைக்கு - முன்கையிலணிந்த வளையல்களையுடைய பார்வதிதேவி
க்கு, ஆகம்-பாதிவடிவத்தை, பரிந்து - விரும்பி, அளித்தார் - கொடுத்தவரும்,
கொன்றைநறைவளைக்கும் முடியார் - கொன்றைப்பூக்களின் வாசனைசூழ்ந்த
திருமுடியையுடையவருமாகிய, அகிலேசர் - விசுவநாதருடைய, அடிக்கே -
திருவடிகளிடத்திலே, சென்று - போய், உருகீர் என்று - (இப்பெண்ணினி
டத்தில்) மனமிரங்கக் கடவீரென்று, கூறிடும்-தூதுசொல்லுங்கள், (எ - று.)

இறைவளை - வேற்றுமைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித் தொ
கை. நறை - மதுவுமாம். ஏகாரம் - தேற்றம். துறை - இடமுமாம். குருகீர்-
என்பது சம்போதநம் [பன்மைவிளி.] தூமொழி - பண்புத்தொகைப் புற
த்துப்பிறந்த அன்மொழித்தொகை. கைக்கு - உருபுமயக்கம். குருகென்பது -
வளைமுதலியபலபொருள்கொண்ட ஒருசொல். ஆல் - ஆதலால் என்பதன்வி
காரம்; அசையுமாம். ஏ - ஈற்றசை. (௩)

[புயவகுப்பு. இரட்டை ஆசிரியச் சந்தவிருத்தம்.]

(முதலடி.)

இடமறமிடைதருகடவுளர்மடவிய
ரெறிதருகவரிநிழற்கட்டுயின்றன
இனவளைகொடுமதனிடுசயவிருதென
விறையவளெழுதுசுவட்டுக்கிசைந்தன

இருவருநிகரெனவரிசிலைவிசயனொ
டெதிர்பொருசமரினிளைப்புற்றிருந்தன
இணையடிபரவியமலடிமுனுதவிய
விடியலினுணவொருதடபரிந்தன

(இரண்டாமடி.)

படவரவுமிழ்தருமணிவெயில்விடவளர்
பரிதியொடெழுமுதயத்திற்பொலிந்தன
பருகுமினமிர்தெனவுருகிருகவிஞர்கள்
பனுவலின்மதுரவிசைக்குக்குழைந்தன
படரொளிவிடுசுடர்வலயமதெனவொரு
பருவரைநெடுவிலெடுத்துச்சுமந்தன
பரர்புரமெரியொடுபுகையெழமலர்மகள்
பணைமுலைதழுவுசரத்தைத்துரந்தன

(மூன்றாமடி.)

மடலவிழ்தடமலரிதழியினிழிதரு
மதுமழையருவிகுளித்துக்கிளர்ந்தன
வழிதரவுதிரமுநிணமொடுகுடர்களும்
வருநரகரியின்மதத்தைத்தடிந்தன
மதகரியுரியதள்குலகிரிமுதுகினின்
மழைமுகிறவழ்வதெனப்பொற்பமைந்தன
மலியுமிழ்நிலவொடுமடுதிறல்வெயிலெழ
மதிகதிர்வலம்வருவெற்பொத்துநின்றன

(நான்காமடி.)

குடவளைதுறைதொறுமுடுநிரையெனவிரி
குளிர்நிலவெழவுமிழ்முத்தத்தடங்கரை
குலவியபடர்சிறைமடவனமொடுசில
குருகுகள்சினையொடணைத்துத்துயின்றன
குரைபுனல்வரநதிசுரர்தருமுருகவிழ்
கொழுமலர்சிதறவிழுத்தத்துவிண்டொடு
குலகிரியுதவியவளரிளவனமுலை
கொழுநர்தமமுகியகொற்றப்புயங்களே.

(இ - ள்.) இடம் அற - வெற்றிடமில்லாமல், மிடைதரு - நெருங்கிய, கடவுளர் மடவியர் - தெய்வமகளிர், எறிதரு - வீசுகின்ற, கவரிநிழற்கண் - சாமரை நிழலில், துயின்றன - தங்கின; இனவளைகொடு - கூட்டமாகிய கைவளையினால், மதன் இடு சயவிருது என - மன்மதன்கட்டிய வெற்றிக்கொடிபோல், இறையவள் எழுதுசுவட்டுக்கு - பார்வதிதேவி எழுதுகின்ற சித்திரத்திற்கு, இசைந்தன - சம்மதித்திருந்தன; இருவரும் நிகர் என - இரண்டுபேர்களும் ஒப்பென்னும்படி, வரிசிலை விசயனொடு - கணுக்களையுடைய (காண்டீவமென்னும்) வில்லைத்தாங்கிய அருச்சுனனோடு, எதிர்பொருசம

ரின் - எதிர்த்துச்செய்த யுத்தத்தில், இளைப்புஉற்று இருந்தன - மெலிந்திருகின்றன; இணைஅடி - உபயபாதங்களை, பரவிய - வணங்கின, மலடி - மலடியானவள், முன் உதவிய - முன்னே கொடுத்த, இடியலின் - மாவாகிய, உணவு ஒருதட்டை - ஒருதட்டு ஆகாரத்தை, பரிந்தன - விரும்பிச்சுமந்தன; படம் அரவு உமிழ்தரும் மணி - படத்தையுடைய பாம்புகள் கக்குகின்ற இரத்தினங்கள் [நாகரத்தினங்கள்], வெயில்விட - (சூரியகிரணம் போன்ற) கிரணங்களை வீசுவதினால், வளர்பரிதியொடு - உதிக்கின்ற சூரியனோடு [பாலசூரியனோடு], எழும் உதயத்தின் - விளங்குகின்ற உதய பருவதத்தைப் போல, பொலிந்தன - விளங்கின; அமிர்துபருகுமின்என - அமிர்தத்தை உண்ணுமென்று, உருகு இருகவிஞர்கள் - உருகுகின்ற இரண்டு கவிஞர்களுடைய, பனுவலின் - பாட்டுக்களின், மதுரம் இசைக்கு - இனிப்பாகிய இராகத்திற்கு, குழைந்தன - இளகின [தளிர்த்தன]; படர்ஒளிவிடு - மிகுந்த காந்தியை வீசுகின்ற, சுடர்வலயமது என - சூரியமண்டலம்போல, ஒருபருவரைநெடுவில் - ஒருபருத்த மேருமலையாகிய பெரியதனுவை, எடுத்து சுமந்தன - எடுத்துத்தாங்கின; பரர்புரம் - சத்துருக்களுடைய (முப்) புரங்கள், எரி ஒடு புகை எழ - நெருப்பும் புகையும் கிளம்பும்படி [தீப்பற்றியெரியும்படி], மலர்மகள் முலைகள்தழுவுசரத்தை - இலக்குமியினுடைய தனங்களை ஆலிங்கனஞ்செய்கின்ற [விஷ்ணுவாகிய] பாணத்தை, துரந்தன - எய்தன; இதழி - கொன்றையினது, மடல் அவிழ் தட மலரின் - இதழ்கள்விரிந்த பெரியபுஷ்பங்களினின்றும், இழிதரு மது - பெருகுகின்ற தேனாகிய, மழை அருவி - குளிர்ச்சியையுடைய வெள்ளத்தில், குளித்துக்கிளர்ந்தன - மூழ்கி விளங்கின; நிணம்ஒடு - இரணியாசுரனுடைய கொழுப்போடு, உதிரமும்-(அவனுடைய) ரக்தமும், குடர்களும் - குடல்களும், வழிதர - மிகுந்துவடியும்படி, வரும் - (தூணில்) தோன்றிய, நரகரியின் - நரசிங்கத்தினுடைய, மதத்தை - செருக்கை, தடிந்தன - குறைத்தன; மதகரி உரி அதள் - மதயானையை உரித்ததோல், குலகிரிமுதுகினில் - குலபர்வதத்தின் புறத்திலே, மழைமுகில் தவழ்வதுஎன - நீர்கொண்ட மேகந்தவழ்தல்போல, பொற்பு அமைந்தன - (தம்மேலே) பொலிவுபெறுதற்குக் காரணமாயிருந்தன; மலி உமிழ் நிலவு ஒடு-நிறைந்த (ஒளியை)வீசுகின்ற சந்திரகிரணமும், மடுதிறல்வெயில் - நிறைந்ததன்மையையுடைய சூரியகிரணமும், எழ - எழுந்துவீசுதலால், மதிகதிர் வலம்வருவெற்பு ஒத்துநின்றன - சந்திர சூரியர்கள் வலம்வருகின்ற மேருமலையை யொத்திருந்தன; (அவையெவையெனில்) குலவிய படர்சிறைமடம் அனம் ஒடு - விளங்குகின்ற பரந்த இறகுகளையுடைய இளைய அன்னங்களோடே, சிலகுருகுகள் - சிலநாரைகள், சினையொடு - தம்முட்டைகளை, அணைத்துத்துயின்றன - தழுவித் தூங்கப்பெற்றனவாகிய, குடவளை - குடம்போன்ற சங்குகள், துறைதொறும் - இடங்கள்தோறும், விரிகுளிர் நிலவு எழ - பரந்தகுளிர்ந்த சந்திரகிரணம்போன்ற காந்தி வீசும்படி, உடுநிரை என - நக்ஷத்திரங்களின் கூட்டம்போல், உமிழ்முத்தம் - கக்குகின்றமுத்துக்களையுடைய, தடகரை - பெரியகரைகளையுடைய, குரைபுனல்வரநதி - ஒலிக்கின்ற நீரையுடைய சிறந்த கங்காநதியானது, சுரர்தரும் முருகு அவிழ்கொழுமலர் சிதறு - தேவர்கள்பெய்கின்ற வாசனைவீசுகின்ற செழித்த பூக்களைச்சொரிகின்ற, அவிமுத்தத்து - காசியிலே (எழுந்தருளி யிருக்கின்ற), விண்தொடுகுலகிரி உதவிய - ஆகாயத்தை யளாவுகின்ற (இமவானென்னும்) மலையரசன் பெற்ற, வளர் இள வனமுலை - மேன்மேல் வளர்கின்ற இளமையையும் அழகையுமுடைய தனங்களையுடைய பார்வதி தேவியினது, கொழுநர்தம் - கணவராகிய சிவபெருமானது, அழகிய - அழகையுடைத்தாகிய, கொற்றம் - வெற்றியையுடைய, புயங்கள் - திருத்தோள்கள், (எ - று.)

கவரி - ஓர்மான், அதன்வாலின்மயிராற்செய்தகற்றைக்கு ஆகியது. விருது- அடையாளம்; அது கொடிக்காகியது. பொருசமர் - சேற்றிற்பங்கயம் என்றாற்போலநின்றது. சமர் - ஸமரமென்னும் வடமொழிச்சிதைவு. மலடி- பிள்ளையில்லாதவள். படவரவு - ஆபரணமாயணிந்தநாகங்கள், தாருகாவனத்து முனிவரேவியவை. எண்ணிறந்தகிரணங்களையுடைத்தாயிருத்தலால் சூரியனைப்படரொளி விடுசுடரென்றார். திருமால் அம்பாய்நிற்றலால் அவரை மலர்மகள்பணைமுலைதழுவுசரமென்றார். இதழிமலர் - சடையில் சூடப்பட்டன. நரகரியின் மதத்தைத்தடிந்தனவென்றது - சரபாவதாரமாய் நரசிங்கத்தை வென்றதோர்கதையையுட்கொண்டு. நரஹரி - கழுத்து வரையிலும் மானிடவுருவமும், அதன்மேல் சிங்கவுருவமுமானவிஷ்ணுவின் ஓர்திருவவதாரம். [சரபம் - எண்கால்விலங்கு, அது சிங்கத்தையடக்கும் வலியினது.] குலகிரியேழு - கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி; அன்றிக் கந்தமாதனங்கூட்டி யெட்டென்பது மொன்று. ஈண்டுச் சந்தர்ப்பத்தால் இமயத்தை யுணர்த்தியது. மழை முகிலென்றார், அதுவேகருநிறமுடையதாகலின். நிலவும், வெயிலும் - பரமசிவனது இடக்கண்ணாகிய சந்திரனினின்றும், வலக்கண்ணாகிய சூரியனினின்றும் உண்டாயின. தடங்கரை - உயிரீற்றுரிச்சொன்முன் மெல்லெழுத்து மிக்கது. துயின்றனகரை - இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேலேற்றப்பட்டது.

இது புயவகுப்பு; அதாவது - பிரபந்தத்தலைவனது தோளழகை வர்ணித்து அவனது பெருமையை யெடுத்துக்கூறுவது; புயம் - தோள், வகுப்பு - அழகு.

[நேரிசைவெண்பா.]

புயலார்பொழிற்காசிப்பூங்கோயின்மேய
கயலார்தடங்கணாள்காந்தன்—செயலாவி
உய்யத்துதியாருதிப்பார்துதிப்பாரேல்
வையத்துதியார்மறுத்து.

(இ - ள்.) புயல் ஆர் பொழில் காசி - மேகங்கள் பொருந்திய சோலைகளையுடைய காசிநகரத்தில், பூகோயில் - அழகியவாலயத்தில், மேய — எழுந்தருளிய, கயல் ஆர் தடகணாள் காந்தன் - கெண்டைமீன்போன்ற பெரிய கண்களையுடையவளது [விசாலாட்சியினது] கணவனாகிய பரமசிவனது, செயல் - திருவிளையாடல்களை, ஆவி உய்ய - உயிர்நற்கதியடையும்படி, துதியார் - தோத்திரஞ்செய்யாதவர்கள், உதிப்பார் - (வையத்துப்) பிறப்பார், துதிப்பாரேல் - தோத்திரஞ்செய்வாரானால், வையத்து - உலகத்தில், மறுத்து உதியார் - மீண்டும் பிறவார் [முத்தியடைவர்], (எ - று.)

கோயில் — இலக்கணப்போலி. மேய - மேவிய வென்பதன் விகாரம். பூங்கோயில் - பூப்பெயர்முன் இனமென்மைதோன்றிற்று. துதியார் - எதிர்மறைவினையாலணையும்பெயர். ஏல் - எனிலென்பதன் மரூஉ. (ரு)

[சந்திரோபாலம்பனம். கட்டளைக்கலித்துறை.]

மறைக்கோலங்கொண்டவகிலேசரேயின்றுமாதர்முன்னே
பிறைக்கோலங்கொண்டுபுறப்பட்டவாமுன்பிறைமுடித்த
இறைக்கோலமோலமெனத்தேவரோலமிடவிருண்ட
கறைக்கோலங்கொண்டுணுங்கண்டத்தொளித்தகனல்விடமே.

(இ-ள்.) மறைகோலம் கொண்ட அகிலேசரே - வேதங்களினுருவத்தைக் கொண்ட விசுவநாதரே, முன் - பாற்கடல் கடைந்த காலத்தில், தேவர் -

இந்திரன்முதலியதேவர்கள், பிறைமுடித்த இறைக்கு - மூன்றாம் பிறைச்சந்திரனைத்தலையிற்சூடிய சிவபெருமானுக்கு, ஓலம்ஓலம் என - அபயம் அபயம் என்று, ஓலமிட - முறையிட, (அதற்கிரங்கி) இருண்டகறைகோலம் கொண்டு - கறுத்தகளங்கத்தினுருவத்தைக் கொள்ளும்படி, உறும் - புசிக்கப்பட்டதும், கண்டத்து - திருமிடற்றிலே, ஒளித்த - மறைக்கப்பட்டதுமான, கனல்விடம் - அக்கினிச்சுவாலையை வீசுகின்ற விஷமானது, இன்று - இப்பொழுது, மாதர் முன்னே - (என்போன்ற) பெண்களின்முன்னே, பிறைகோலம்கொண்டு - சந்திரனுருவத்தைக்கொண்டு, புறப்பட்டது - வெளிப்பட்டவிதமென்?

அகிலேசரே - விளி. ஆ - ஆறென்பதன் விகாரம். என்னென ஒருசொல் வருவிக்க. ஓலமோலம் - அச்சத்தினால் இரண்டடுக்கிற்று. [இதுசந்திரோபாலம்பனமென்னுந் துறை; அஃதாவது தலைவன்பிரிவாற்றாததலைவி விரகதாபத்தால்வருந்திச் சந்திரனைநிந்தித்தல்.]　　　　(கூ)

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

விடுத்தவாளிக்கும்விரகிலாக்கருப்புவில்வீணன்மீளவும்வாளாத்
தொடுத்தவாளிக்குமேபகைமூண்டதித்தூயநன்மொழிக்கென்னாம்
அடுத்தநான்மறைமுனிவரர்நால்வர்க்குமம்மறைப்பொருள்கூற
எடுத்தகோலமாயாநந்தவனத்துமெம்மிதயத்துமிருந்தோனே.

(இ-ள்.) அடுத்த நால்மறை முனிவரர் நால்வர்க்கும் - பொருந்திய நான்கு வேதங்களையுடைய முனித்தலைவர் நான்குபேர்களுக்கும், அ மறைபொருள் கூற - அந்தவேதங்களின் அர்த்தத்தைச்சொல்லுதற்கு, எடுத்தகோலமாய் - தாங்கினவுருவமாய், ஆநந்தவனத்தும் - ஆநந்தவனத்திலும், எம் இதயத்தும் - எமதுமனத்திலும், இருந்தோனே - இருந்தபரமசிவனே, விடுத்தவாளிக்கும் - (திரிபுரஸம்ஹாரகாலத்தில நீர்) விடுத்தபாணத்துக்கும் [திருமாலுக்கும்], விரகுஇலாகரும்புவில் வீணன் - உபாயமறியாதகருப்புவில்லைத்தாங்கிய பயனில்லாதமன்மதன், மீளவும் - மறுபடியும், வாளா - வீணாக* தொடுத்தவாளிக்குமே - எய்த அம்புக்குமே, பகை மூண்டது - விரோதமுண்டாயிற்று; (அதுவே அவ்வாறாயின்), இ தூயநன்மொழிக்கு - இந்த சுத்தமான இனியசொற்களையுடையபெண்ணுக்கு, என் ஆம் - என்னகேடாகும்? [அதனைச் சொல்லவேண்டுமோ], (எ - று.)

சிவபெருமான் திரிபுரஸம்ஹாரஞ் செய்தகாலத்தில் திருமாலே அம்பாகியதனால் அவரை விடுத்தவாளியென்றது. திருமால் மோகினிவேஷங்கொண்டு நும்மை மயக்கவர, அப்பொழுது நும்மேல் எய்ய மன்மதன் தொடுத்த பாணத்துக்கும் அம்மோகினிக்குமே நும்மை வசப்படுத்தமுடியாது பகையுண்டாயிற்றென்றால் இத்தூயநன்மொழிக்கு என்னாகுமெனத்தாயுரைத்தது; அன்றி இப்பெண்ணின்மேல் மன்மதன்விடுத்து வெற்றிபெற்றவாளிக்கும், நும்மேல்விட வாளாத்தொடுத்த வாளிக்கும் பகைமூண்டதேயன்றி பயனடையவில்லை யாதலின் நீர் இவளிடத் திரங்கவேண்டுமென்றாளென்னவுமாம். இவன்தொடுத்தது பயன்படாமைபற்றி வாளாவென்றும், முன்தொடுத்து பங்கப்பட்டதறியாது மறுத்துந்தொடுத்தானென்பார் மீளவுமென்றும், இதனையறிந்தும் தொடுத்தனனென்பது தோன்ற வீணனென்றுங்கூறினார். கருப்புவில் - மென்றொடர்க் குற்றுகரம் தனக்கினமாகிய வன்றொடர்க்குற்றுக

*ஈ.

ரமாயிற்று. நால்வர் - ஸநகர், ஸநந்தனர், ஸநத்குமாரர், ஸநத்ஸுஜாதர். அம்மறை - அகரச்சுட்டு உலகறிபொருளின்மேலது. இருந்தோன் - ஆ ஓவாயிற்று. (எ)

[கட்டளைக்கலித்துறை.]

இருப்பாரவிமுத்தத்தெங்கேகண்மூடுவரென்றும்வெள்ளிப்
பொருப்பாளரோடித்திரிவதெல்லாமிப்புவனங்களை
உருப்பாதியிற்படைத்தோர்பாதியிற்றுடைத்தூழிதொறும்
விருப்பாருயிர்களின்மேல்வைத்துத்தாஞ்செயும்வேலைகண்டே.

(இ-ள்.) அவிமுத்தத்து - காசியில், இருப்பார் - எழுந்தருளியிருப்பவராகிய, வெள்ளிபொருப்புஆளர் - கைலாசகிரிநாதராகியசிவபெருமான், என்றும் - எப்பொழுதும், ஓடித்திரிவது எல்லாம் - (பலவிடங்களிலும்) அலைந்து ஓடுகின்றதெல்லாம், இபுவனங்களை - இவ்வுலகங்களை, உருபாதியில்படைத்து - பாதிரூபத்தால் சிருட்டித்து, ஓர்பாதியில் துடைத்து - மற்றொருபாதியால் அழித்து, ஊழிதொறும் - யுகங்கள்தோறும், விருப்பு - அருளை, ஆர்உயிர்களின் மேல்வைத்து - நிறைந்த ஆத்துமாக்களின்மேல் வைத்து, தாம் செயும் வேலை கண்டே - (அவ்வுயிர்கள்) தாஞ்செய்கின்ற தொழிலைக் கண்டுதான் (வேறுபயனைக் கருதியன்றாதலால்); எங்கேகண்மூடுவர் - எப்பொழுதுஇமைகுவிப்பார், (எ - று.)

கண்மூடுவர் - இது இலக்கணையாய் ஒழிந்துநிற்பதற்கு வந்தது. பொருப்பு-மலை. உருப்பாதி - சக்திரூபமானபாதி. ஓர்பாதி - சிவரூபமானபாதி. தாம் - சிவனார்தாமென்றுமாம். அவர் ஒழிவில்லாத விளையாட்டையுடையரென்பது கருத்து. (அ)

[இரங்கல். அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

கண்ணொன்றுதிருநுதலிற்கனலுருவ
மாப்படைத்தகாசிநாதா
தண்ணொன்றுநறையிதழித்தாரென்றா
ணெட்டுயிர்த்தாடரைமேல்வீழ்ந்தாள்
எண்ணொன்றுமுணராமேகிடக்கின்றா
ளிதுகண்டாலெழுத்தொன்றோதத்
துண்ணொன்றுவருவரெனத்துணிந்தனளோ
வறியேனித்தோகைதானே.

(இ-ள்.) கண்ஒன்று - ஒருநேத்திரத்தை, திருநுதலில் - அழகிய நெற்றியில், கனல் உருவம் ஆ(க)-அக்நிரூபமாக, படைத்த-பெற்ற, காசிநாதா-காசிநகரத்துக்குத்தலைவனாகிய சுவாமீ, தண் ஒன்று நறை இதழி தார் என்றாள் - குளிர்ச்சிபொருந்திய வாசனையையுடைய கொன்றைமாலை என்று சொன்னாள், நெட்டுயிர்த்தாள் - பெருமூச்சுவிட்டாள், தரைமேல் வீழ்ந்தாள் - நிலத்தில் விழுந்தாள், எண் ஒன்றும் - ஒருநினைவும், உணராமே - அறியாமல், கிடக்கின்றாள் - இருக்கின்றாள், இது கண்டால் - இதனைநோக்குமிடத்து, இத்தோகை - இப்பெண், எழுத்து ஒன்று ஓத - ஒற்றையெழுத்தாகிய பிரணவத்தைச் சொல்ல

(அதற்கு), துண்ணென்று வருவர்-(விசுவநாதர்) விரைந்துவருவார், எனதுணிந் தனளோ - என்றுநிச்சயித்தாளோ? அறியேன் - தெரியேன், (எ - று.)

தான் - அசை. ஏ - ஈற்றசை. தண்மை யென்னும் பண்புச்சொல் ஈறு போய்நின்றது. நெட்டுயிர்த்தாள் - நெட்டுயிர் என்னும் பெயர்ச்சொல்லடியாகப்பிறந்தவினைமுற்று. தரா - தரையென ஆவீறையாயிற்று. துண்ணெனல் - விரைவுக்குறிப்பு. தோகை - உவமவாகுபெயர். (கூ)

[இரங்கல். நேரிசைவெண்பா.]

தோகையுயிர்முடிப்பான்றும்பைமுடித்தான்மதவேள்
வாகைமுடித்திடவும்வல்லனே—ஆகெடுவீர்
காமாந்தகர்காசிக்கண்ணுதலார்க்கோதீர்மற்
றேமாந்திராமலெடுத்து.

(இ-ள்.) தோகை உயிர்முடிப்பான் - இப்பெண்ணின்பிராணனை நீக்குவதற்கு, மதம்வேள் - மதத்தையுடைய மன்மதன், தும்பைமுடித்தான் - தும்பை மாலையைச் சூடினான், வாகை முடித்திடவும் - வெற்றிமாலையைச் சூடவும், வல்லனே - சமர்த்தனே, (ஆதலால்) ஆகெடுவீர் - ஓபாவிகளே, காமாந்தகர் - காமனுக்கு யமனானவராகிய, காசிகண்நுதலார்க்கு - காசியிலெழுந்தருளிய சிவபெருமானுக்கு, ஏமாந்திராமல் - தடுமாறாமல், எடுத்து ஓதீர் - இச்செய்தியை எடுத்துச்சொல்லுங்கள், (எ-று.)

முடிப்பான் - பானீற்றெதிர்கால வினையெச்சம். மதம் - செருக்கு. உம்மை- இறந்ததுதழீஇய வெச்சம்; உயர்வுசிறப்புமாம். ஏ - தேற்றம். ஆ - இரக்கச்சொல். அந்தகன் - அந்தத்தைச்செய்கிறவன், யமன். மற்று - வினைமாற்று; அசையுமாம். (க0)

[இரங்கல். கட்டளைக்கலித்துறை.]

எடுக்கச்சிவந்தசிலம்படியாரகிலேசர்நறைக்
கடுக்கைச்சடைமுடியாரடியார்க்குக்கலைகள்கொய்து
கொடுக்கக்கொடுக்கவளர்கின்றவாவெறுங்கூட்டிலெரி
மடுக்கக்குறையுயிர்மாதரைத்தேடுமதிக்கொழுந்தே.

(இ-ள்.) வெறுகூட்டில் - வெறுமையாகிய கூண்டில், எரிமடுக்க - தீயை நிறைப்பதற்கு, குறை உயிர்மாதரை - குறைகின்ற உயிரையுடைய மகளிரை, தேடும் - நாடுகின்ற, மதிக்கொழுந்து - இளம்பிறையானது, எடுக்கசிவந்த சிலம்பு அடியார் - (திருநடமாடுவதற்கு) எடுத்துவைப்பதனால் சிவந்திருக்கின்ற சிலம்பென்னும் அணியையணிந்ததிருவடிகளையுடையவரும், நறைகடுக்கை சடைமுடியார் - வாசனையையுடைய கொன்றைமலரை யணிந்த சடைமுடியையுடையவருமாகிய, அகிலேசர் - விச்வநாதர், அடியார்க்கு - (தமது) பக்தர்களுக்கு, கலைகள் - சந்திரனதுகலைகளை, கொய்து - பறித்து, கொடுக்கக்கொடுக்க - தினந்தோறும் கொடுத்துக்கொண்டிருக்க (குறையாமல்), வளர்கின்ற ஆ (று) - (அவை) வளர்ந்துவருகின்றவிதம் (என்), (எ-று.)

சிவந்த அடியெனக்கூட்டுக. சிவனடியார்கள் சாரூப்பியத்தால் இளம்பிறையை முடியிற்சூடுதலால் அடியார்க்குக் கலைகள்கொய்து கொடுக்கக் கொடுக்கவென்றார். கணவனைப்பிரிந்து களிப்பில்லாத காரிகையாருடலை வெறுங்கூடென்றார். (கக)

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

கொழுதிவரிவண்டுழுதுழக்குங்குழலீர்நறுங்கட்கோதையிவள்
அழுதவிழிநீர்முந்நீரையுவர்நீராக்குமதுகூறீர்
எழுதவரியதிருமார்பிலிளஞ்சேய்சிறுசேவடிச்சுவடும
முழுதுமுடையாண்முலைச்சுவடுமுடையார்காசிமுதல்வர்க்கே.

(இ-ள்.) வரிவண்டு – இசைப்பாட்டுக்களையுடைய வண்டுகள், கொழுதி - (மலர்களைத்) துளைத்து, உழுது—, உழக்கும் - மிதிக்கின்ற, குழலீர் - கூந்தலையுடைய மாதர்களே, நறு கள் கோதை இவள் - மணக்கின்ற தேனையுடைய மாலையையணிந்த கூந்தலையுடைய இந்தப்பெண்ணினது, அழுத - அழுதலுண்டாகிய, விழிநீர் - கண்ணீரானது, முந்நீரை - கடலை, உவர்நீர் ஆக்குமது- உப்புநீராகச்செய்தலை, எழுத அரிய திருமார்பில் - (சித்திரத்திலும்) எழுதமுடியாத அழகையுடையமார்பில், இளயசேய்சிறுசேவடிசுவடும் - இளையமகனாகிய சுப்பிரமணியனுடைய சிறியபாதங்களின் தழும்பையும், முழுதும் உடையாள் - எல்லாவற்றிற்குந்தலைவியாகியபார்வதியினது, முலைசுவடும் - முலைகளின் தழும்பையும், உடையார் - உடையவராகிய, காசிமுதல்வர்க்கு - காசிநாதருக்கு, கூறீர் - சொல்லுங்கள், (எ-று.)

வரி - பாட்டு; புள்ளியுமாம். உழக்குதல்- கலக்குதலுமாம். கோதை-மாலை; அது கூந்தலுக்காகி, பின் பெண்ணுக்காதல் இருமடியாகுபெயர். அழுத விழிநீர் - சங்குசுட்டசுண்ணாம்பென்பதுபோல் பெயரெச்சம் காரணப்பொருளதாய் நின்றது. முந்நீர் - உலகத்தைப் படைத்தலுங் காத்தலு மழித்தலுமாகிய மூன்றுதன்மையையுடையகடல், ஆகுபெயர்; ஆற்றுநீர், ஊற்றுநீர், வேற்றுநீர் [மழைநீர்] என்னும் மூன்றுநீரையுடையதென, அன்மொழித்தொகையுமாம். மனதிற்குத்திருப்தியாகும்வரையிலும் அவித்தவித்தெழுதத்தக்க சித்திரத்திலும் எழுதவரியதென அழகின்பெருமை விளக்கிற்று. திருவென்பது கண்டாரால் விரும்பப்படுந்தன்மைநோக்கம், அதாவது அழகு. சேய் - செம்மைநிறத்தையுடையவன், பண்பாகுபெயர்; சேவடி - செம்மை ஈறு போய் ஆதிநீண்டு முன்னின்ற மெய்திரிந்தது. (கஉ)

[நேரிசைவெண்பா.]

வரைவளைக்கும்பொற்படந்தோண்மைந்தர்க்கிவரார்
நிரைவளைக்கையார்நகைக்குநேராக்—கரையிற்
குவிமுத்தம்வெண்ணிலவுகொப்புளிக்குங்கங்கை
அவிமுத்தஞ்சென்றிறைஞ்சாதார்.

(இ-ள்.) நிரைவளைகையார் - கூட்டமாகியவளையல்களையணிந்த மாதர்களுடைய, நகைக்கு - புன்சிரிப்புக்கு, நேரா - ஒப்பாகி, கரையில் - தீரத்தில், குவிமுத்தம் - தன்றாற் குவிக்கப்பட்ட முத்துக்கூட்டம், வெள்நிலவு - வெண்மையாகிய சந்திரகாந்தியை, கொப்புளிக்கும் - வீசுகிற, கங்கை - கங்காநதிக்கரையிலுள்ள, அவிமுத்தம் - காசியை, சென்று-அடைந்து, இறைஞ்சாதார்- (அங்கெழுந்தருளியிருக்கும் விசுவநாதரை) வணங்காதவர், வரைவளைக்கும் பொன்தடதோள்மைந்தர்க்கு - மேரு மலையை வில்லாக வளைத்த அழகிய பெரிய தோள்களையுடைய அச் சிவபெருமானிடத்தில், இவரார் - ஆசைப்படார், (எ - று.)

மைந்தர் - வலிமையுடையவர், மைந்து - வலி, அழகுமாம். மைந்தர்க்கு - உருபுமயக்கம். மைந்தர்க்கு இவரார் என்பதற்குச் சிவபெருமானுக்கு அன்பரா காரென்றுமாம். கங்கையானது கரையில்குவிக்கின்ற முத்துக்கள் வெண்ணி லவைக்கொப்புளிக்கும் அவிமுத்தமெனக்கூட்டியுரைப்பினும் அமையும். ()

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்]

ஆர்க்கும்படைவேளரசிருப்பென்றஞ்சாதடிகளருட்காசி, ஊர்க்கு
ம்புதுத்தோரணம்வைத்தாலுமக்கிங்கிவள்பேச்சுரைப்பாரார், வார்க்
குங்குமப்பூண் முலைச்சுவட்டைவளையென்றோடிவளைந்துசுற்றிப்,
பார்க்குந்தொளைமுள்ளெயிற்றுரகப்பணியீர்மோகந்தணியீரே.

(இ-ள்.) வார்குங்குமம் பூண்முலை சுவட்டை - கச்சாற்கட்டிய குங்குமத்தையும்ஆபரணங்களையும் அணிந்த(பார்வதியினுடைய)தனங்களின் தழும்பை, வளைஎன்று-தாம்நுழையும் வளையென்றுமயங்கி, ஓடி வளைந்து - விரைந்துசென்று அதைச்சூழ்ந்து, சுற்றிப்பார்க்கும்-எல்லாப்பக்கங்களினும்பார்க்கின்ற, தொளை முள் எயிறு உரகம்பணியீர் - உட்டுளையுள்ள கூரியபற்களையுடைய பாம்புகளாகிய ஆபரணங்களையுடைய பரமசிவனே, ஆர்க்கும்படைவேள் அரசு இருப்பு என்று - ஆரவாரிக்கின்றசேனையையுடையமன்மதனது இராச்சியபாரஞ்செய்யுமிடமென்றுசொல்லி, அடிகள்அருள் காசிஊர்க்கும் - சுவாமியாகிய நீர் அருள்புரிவதற்கிடமாகிய காசிநகரத்திற்கும், அஞ்சாது - பயப்படாமல், புதுதோரணம்வைத்தால் - புதியதோரணங்களைக்கட்டினால், உமக்கு-உமக்கு, இங்கு - இவ்விடத்தில் வந்து, இவள்பேச்சு - இப்பெண்ணினுடைய வார்த்தையை, உரைப்பார் ஆர் - சொல்பவர்யாவர், (ஒருவருமில்லை ஆதலால்), மோகம் - இப்பெண்ணினது காமநோயாகிய நெருப்பை, தணியீர் - குளிரச்செய்யக் கடவீர், (எ று.)

பேச்சு - வார்த்தை, விருத்தாந்தம். வார்முலை, குங்குமமுலை, பூண்முலை யெனக்கூட்டுக. முலைச்சுவட்டை வளையென்று மயங்குதலால் மயக்கவணி. உரகம்-மார்பினால்நகர்ந்துசெல்வது, பாம்பு. தணியீர்-ஈண்டுப்பிறவினை. (கச)

[பிச்சியார். கட்டளைக்கலிப்பா.]

தண்ணுலாம்பொழிற்காசித்தெருவினீர்தரித்திடுந்தவக்கோலமுஞ்
சூலமும், பெண்ணொடாடுமப்பிச்சனுக்கொத்தலாற்பிச்சியாரெனும்
பேர்தரித்தாடுவீர், வெண்ணிலாமுகிழ்க்குங்குறுமூரலால்வீணிலே
யெம்புரத்தெரியிட்டநீர், கண்ணினுமிக்காமனைக்காய்ந்திடிற்கட
வுணீரொன்றிறைஞ்சுதுங்காணுமே.

(இ-ள்.) தண் உலாம்பொழில் காசிதெருவில் - குளிர்ச்சிபொருந்தியசோலைகளையுடைய காசிநகரத்தின் வீதிகளில், நீர் - நீவிர், தரித்திடும்தவக்கோலமும் - அணிந்ததவத்திற்குரிய அலங்காரத்தாலும், சூலமும் - சூலாயுதத்தினாலும், பெண் ஒடு ஆடும் அ பிச்சனுக்கு - பெண்ணோடு நர்த்தனஞ்செய்கின்ற அந்தச்சிவபெருமானை, ஒத்தலால் - ஒத்திருத்தலால், பிச்சியார் எனும்பேர் தரித்து - பிச்சியாரென்கிற நாமத்தை வகித்து, ஆடுவீர் - ஆடுகின்றவரே, வெள்நிலாமுகிழ்க்கும் குறுமூரலால் - வெள்ளியநிலாவை அரும்புகின்ற புன்

சிரிப்பினால், வீணிலே - பயனில்லாமல், எம் புரத்து எரியிட்டீர் - எமது புரத்தில் [சரீரத்தில்] நெருப்பைவைத்த நீவிர், கண்ணினால் - நேத்திரத்தால், இ காமனையும் - இந்தமன்மதனையும், காய்ந்திடில் - எரித்துவிட்டால், நீர் கடவுள்என்று - நீவிரே சிவபெருமா னென்றெண்ணி, (நும்மை) இறைஞ்சுதும - வணங்குவேம், (எ-று.)

பிச்சன் - பித்தனென்பதன்போலி. முகிழ்த்தல் - தோற்றுவித்தல். வேடத்திற்குத்தக்க செயலு மிருந்தால் உம்மைக் கடவுளென்றெண்ணுவேம் என்றாரென்பதுகருத்து. புன்சிரிப்பினால் எமது உடம்பிற்காமநோயாகிய அக்கினியையிட்டவென. உள்ளுறைப்பொருளுங் கொள்க. காணும் - முன்னிலையசை. தரித்திடுமென்பதனைச் சூலமென்பதனோடும் ஒட்டுக. (கரு)

[கட்டளைக்கலிப்பா.]

காணுங்காணு நதிகளெல்லாம்புனற்கங்கையேயங்குளதெய்வம் யாவையுந், தாணுவெங்களகிலேசரேமற்றைத்தலங்கள்யாவுந்தடமதிற்காசியே, பூணுமாசைமற்றொன்றேயுடல்விடும்போதுநன்மணிகர்ணிகைப்பூந்துறை, பேணுமாறுபெறவேண்டுமப்புறம்பேயொடாடினுமாடிப்பெறுதுமே.

(இ-ள்.) காணும் காணும் நதிகள் எல்லாம் - பார்க்கின்ற பார்க்கின்ற ஆறுகளெல்லாம், புனல்கங்கையே - நீரையுடைய கங்காநதியே;அங்கு உளதெய்வம்யாவையும் - அவ்வந்நதிகளுக்கடுத்த அவ்வவ்விடங்களிலுள்ள எல்லாக் கடவுளும், தாணு எங்கள் அகிலேசரே - சிவபெருமானாகிய எங்கள்கடவுளே; மற்றை தலங்கள் யாவும் - அக்கடவுளிருக்கும் பிறஇடங்களெல்லாம், தடமதில்காசியே - பெரியமதிலையுடையகாசிநகரமே; (ஆயினும்) பூணும் ஆசை- அடையவேண்டிய விருப்பம், ஒன்றே - ஒன்றுதான் (வேறொன்றுமில்லை, அதுஎது வென்றால்), உடல்விடும்போது - உயிர் உடலைவிட்டு நீங்குங்காலத்தில், நல் மணிகர்ணிகை பூ துறை - சிறந்த மணிகர்ணிகையென்னும் அழகியதுறையை, பேணும் ஆறு - அடைகின்ற விதத்தை, பெறவேண்டும் - அடைதல் வேண்டும் (என்பதே), அப்புறம் - அதனைப்பெற்றபின்பு, பேயொடு ஆடினும் - பேயுடன் கூத்தாடினாலும், ஆடி - நர்த்தநஞ்செய்து, பெறுதும் - (யாம்வீட்டுலகத்தை) அடைவோம், (எ-று.)

தாணு - ஸ்த்தாணுவென்னும் வடமொழிச்சிதைவு ; பிரளயத்திலும் இருக்கின்றவரென்பது அதன்பொருள். மணிகர்ணிகாகட்டம் என்பது கங்கையின் ஓர்சிறந்ததுறை ; இதன் சிறப்பைக் காசிகாண்டத்துட் காண்க. பேணுதல் - விரும்புதலுமாம். வேண்டுமென்பது ஈண்டு இன்றியமையாதென்னும் பொருளது. (கசா)

[இதுவுமது.]

பெற்றமூர்வதும்வெண்டலையோட்டினிற்
பிச்சையேற்றுத்திரிவதும்பேய்களே
சுற்றமாகச்சுடலையில்வாழ்வதுந்
தோலுடுப்பதுந்தொண்டர்க்கரிதன்றாற்

கற்றைவார்சடைக்காசிப்பதியுளீர்
கற்பந்தோறுங்கடைநாளுலகெலாஞ்
செற்றுமீளப்படைக்கவும்வேண்டுமே
தேவரீர்பதஞ்சிந்திப்பதில்லையே.

(இ-ள்.) பெற்றம் ஊர்வதும் - சாரூப்பியத்தால் விருஷபத்தையேறுவதும், வெண்தலையோட்டினில் - வெண்மையாகிய கபாலத்தில், பிச்சை ஏற்று திரிவதும்-பிச்சையெடுத்து அலைவதும், பேய்களே - பிசாசங்களே, சுற்றம் ஆக - உறவாக, சுடலையில் வாழ்வதும் - மயானத்தில் வசிப்பதும, தோல் உடுப்பதும் - யானைத்தோல் புலித்தோல்களை யுடுத்துக்கொள்வதும், தொண்டர்க்கு - (உமது) பக்தர்களுக்கு, அரிது அன்று - அருமையானதன்று, கற்றைவார்சடை காசிபதிஉளீர் - கூட்டமாகிய நீண்ட (கபர்த்தமென்னும்) சடையையுடைய காசிநகரத்தில் எழுந்தருளியிருப்பவரே, கற்பந்தோறும் - பிரமனுயுள்தோறும், கடைநாள் - முடியுங் காலத்தில், உலகு எலாம் - உலகங்களையெல்லாம், செற்று - அழித்து, மீள - மறுபடியும், படைக்கவும் - சிருஷ்டிப்பதும், வேண்டுமே—,(அதனையறிந்தும்), தேவரீர்பதம் - தேவரீருடைய திருவடியை, சிந்திப்பது இல்லை - சிலர்தியானிப்பது இல்லை (அதற்குக்காரணமென்னே), (எ-று.)

உமது அடியார்களுக்கு ஸாரூப்பியத்தால் மற்றவைகளுடன் சிருஷ்டி ஸம்ஹாராதிகாரமு முண்டாகுமென்பது கருத்து.

ஆவைப்பெற்றமென்பது தென்பாண்டிநாட்டார் வழக்கு; திசைச்சொல். பிச்சை - பிக்ஷா என்னும் வடசொற்றிரிபு. சுற்றம் - உறவு, சுற்றுவது என்னும்பொருளில் அம் என்னும் வினைமுதற் பொருண்மைவிகுதி புணர்ந்த பெயர். செற்று, செறு - பகுதி. (கஎ)

[நேரிசைவெண்பா.]

இல்லாளேமுப்பத்திரண்டறமுஞ்செய்திருப்பச்
செல்லார்பொழிற்காசிச்செல்வனூர்—மெல்லப்
பரக்கின்றபுண்ணீர்படுதலைகொண்டையம்
இரக்கின்றவாறென்சொல்கேன்.

(இ-ள்.) இல்லாள் ஏ - மனைவியாகிய பார்வதிதேவியே, முப்பத்து இரண்டு அறமும் - முப்பத்திரண்டு தர்மங்களையும், செய்து இருப்ப - செய்திருக்க, செல் ஆர் பொழில் காசி செல்வனூர் - மேகங்கள் தங்குகின்ற [உயர்ந்த] சோலையையுடைய காசிநகரத்தில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமான், மெல்ல பரக்கின்ற புண்நீர்படு தலைகொண்டு - மெல்லப்பரவுகின்றரக்தம்பொருந்திய கபாலத்தைக் கையிலெடுத்துக்கொண்டு, ஐயம் இரக்கின்ற ஆறு - பிச்சையெடுக்கின்றவிதத்தை, என்சொல்கேன் - என்னவென்று சொல்லுவேன், (எ-று.)

இல்லாள் - அகமுடையாள், மனையாட்டி. முப்பத்திரண்டறமாவன - ஆதுலர்க்குச்சாலையமைத்தல்முதலியன. செல்வனூர்-தம்மையடைந்தோர்க்குஇராச்சியம், மக்கள், சுற்றம், பொன், மணி, நெல், வாகனம், அடிமை என்னும் அஷ்டைசுவரியத்தையுங் கொடுப்பவர். சொல்கேன், கு - எதிர்காலமுணர்த்திற்று. (கஅ)

[இரங்கல். கொச்சகக்கலிப்பா.]

சொல்லாவதுமறையேசொல்லுவதுநல்லறமே
இல்லாவதுமுத்திக்கேதுவாமித்தலமே
அல்லார்குழலளவுமாகொன்மனம்வயிரக்
கல்லாயிருந்தவாகாசிப்பிரானார்க்கே.

(இ-ள்.) சொல்ஆவது - இவர் சொல்லுகின்ற சொல்லாவது, மறையே - வேதந்தான், சொல்லுவது - இவர் சொல்லுவது, நல் அறமே - நல்லதருமந் தான், இல்ஆவது -இவர்க்கு இருப்பிடமாவது, முத்திக்கு ஏது ஆம் இ தல மே - வீடுபெறுவதற்குக் காரணமாகிய இந்தத்திருப்பதிதான், (இங்ஙனமாக) காசிபிரானார்க்கு-காசியிலெழுந்தருளி யிருக்கின்ற சிவபெருமானுக்கு, மனம் வைரக்கல் ஆய் இருந்த ஆ (று) - நெஞ்சம் வயிரக்கற்போலிருந்தது, அல் ஆர் குழல் அளவும் ஆ கொல்-இருளையொத்த [கரிய] கூந்தலையுடைய இந்தப் பெண்ணளவுமா? (எ-று.)

காசிப்பிரானாரது சொல்லாவது மறையே, அவர்சொல்லுவது நல்லறமே, அவரது இல்லாவது முத்திக் கேதுவாமித்தலமே, அவர்க்குமனம்வயிரக் கல்லாயிருந்தவாறு இவ் அல்லார்குழலளவுங்கொல்? இது இரங்கத்தக்க தென்பதுகருத்து. காசி முத்திதரு நகரமேழு ளொன்றாகலின் இல்லாவது முத்திக்கேதுவா மித்தலமே என்றார். முத்திதருநகரேழாவன - அயோத்தி முதலியன. தன்னை அடைந்தவரிடத் திரக்கமில்லாதிருந்தமையால், மனம் வயிரக்கல்லாயிருந்தவா என்றார். பிரான் - எப்பொருட்குமிறைவன், இது ஆண்பால்; பிராட்டி - பெண்பால். ஆ - இரக்கச்சொல். இதுவும்நற்றாயிர ங்கலாம். (௧௯)

[கட்டளைக்கலித்துறை.]

பிரானென்றவர்க்கொருபெண்ணொடுமோடிப்பெருங்கருணை
தராநின்றகாசித்தடப்பதியார்வந்தென்றன்னகத்தே
இராநின்றனரைம்புலக்கள்வர்கொள்ளையிட்டேகுதற்கே
வராநின்றபோதுள்ளமாதனங்காத்துவழங்குதற்கே.

(இ-ள்.) பிரான் என்றவர்க்கு - எம்பிரானே (எம்மைக்காப்பாயாக) என் றுசரணடைந்தவர்க்கு, ஒருபெண்ஒடு ஓடி - ஒப்பற்ற பார்வதிதேவியோடுஞ் சென்று, பெருகருணை - மிக்கவருளை, தராநின்ற - கொடுக்கின்ற, காசி தடபதியார் - காசியென்னும் பெரியதிருப்பதியிலுள்ளவர், ஐம்புலம்கள்வர்- ஐம்புலன்களாகிய திருடர்கள், உள்ளம்மாதனம் - மனமாகிய மிக்க செல்வத் தை, கொள்ளையிட்டு - பறித்துக்கொண்டு, ஏகுதற்கு - செல்லுதற்கு, வராநி ன்றபோது - வருகிறகாலத்தில், காத்து - அதனைப்பறியாமல் காவல்செய்து, வழங்குதற்கு - எனக்குக்கொடுத்தற்காக, என்தன் அகத்து - என்னுடையமன திலே, வந்து இராநின்றனர் - வந்து எழுந்தருளியிருக்கின்றனர், (எ-று.)

ஆநின்று - நிகழ்கால இடைநிலை. அன்பால் நினைவாரது உள்ளக்கமலத்தி ன்கண் அவர் நினைந்தவடிவோடு விரைந்துசேறலால் இவ்வாறுகூறினார்; "மலர்மிசையேகினான்" என்றார் நாயனாரும். (௨௰)

[கொற்றியார். அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

வழுத்துமவர்க்கானந்தவாழ்வையருள்வார்காசிவளமையெல்லாங்
கொழுந்ததமிழாற்பாடித்துளசிமணிதரித்தாடுங்கொற்றியாரே
பழுத்ததவக்கோலமுங்கைச்சங்குமாழியுங்கண்டுபணிந்தேமாகி
முழுத்ததவத்தால்யாமுமாலாயினேங்கூடிமுயங்குவீரே. [ன்

(இ-ள்.) வழுத்துமவர்க்கு - தம்மைத்துதிப்பவர்க்கு, ஆநந்தவாழ்வை - வீட்டுலகவாழ்க்கையை, அருள்வார் - கொடுக்குஞ் சிவபெருமானது, காசி - காசிநகரத்தினது, வளமை எல்லாம் - வளங்களெல்லாவற்றையும், கொழுதமிழால் - செழிப்பாகிய தமிழ்ப்பாஷையினால், பாடி—, துளசிமணி தரித்து - துளவமணிமாலையை யணிந்து, ஆடும் - கூத்தாடுகின்ற, கொற்றியாரே—, (உம்முடைய) பழுத்த தவம் கோலமும் - முதிர்ந்த தவவேடத்தையும், கை சங்கமும் - கையிலுள்ளசங்கையும் [சங்கு வளையல்களையும்], ஆழியும்-ஆழியையும்[மோதிரத்தையும்], கண்டு - பார்த்து, பணிந்தேம் ஆகில் - வணங்கினேமானால், முழுத்த தவத்தால் - முற்றிய தவத்தினால், யாமும் - நாங்களும், மால்.ஆயினேம் - மாலாயினோம் [மயக்கமானோம்], (ஆதலால்) கூடிமுயங்குவீர் - எம்மோடு சேர்ந்துதழுவுவீராக, (எ-று.)

பாலெய்தமிழாதலாலும், தமிழென்னுஞ் சொற்கு இனிமை யென்னும் பொருளுண்மையாலும், தொண்டர் கடவுளைத் துதித்ததெல்லாம் அப்பாஷையினாலே யாதலாலும், சிவபெருமான் நேரே அகத்தியனார்க்கருளியதாதலாலும், வடமொழியோடொப்புமை இப்பாஷைக்கேயன்றிப் பிறபாஷைகளுக்கின்மையாலும், கொழுத்ததமிழென்றார். துளசிமணி - துளசிச்செடியின் அடிக்கட்டைகளாற் கடைந்து செய்யப்படும் ஓர்வகைமணி. கையிலுள்ள சங்கத்தையும், சக்கரத்தையும் பார்த்துப் பணிந்தேமாகில் பூர்ணமானபாக்கியத்தால் யாமும் (சாரூப்பியமடைந்து) விஷ்ணுவாவோம்; ஆதலால் எம்மோடுகூடி (சிவபெருமான் மோகினிரூபங்கொண்ட விஷ்ணுவோடு புணர்ந்ததுபோல்) தழுவுவீரென்று உள்ளுறைப்பொருளுங்கொள்க. (உக)

[தவம். கட்டளைக்கலித்துறை.]

முயலாமலேதவமுத்தித்திருவைமுயங்கநல்கும்
கயலார்பெருந்தடங்கண்ணிபங்காரருட்காசியிலே
செயலாவதொன்றிலைவாளாநெடுந்துயில்செய்யுமுங்கள்
பயலாகவேபணிசெய்வார்புவனம்படைப்பவரே.

(இ - ள்.) தவம்முயலாமலே - தவம்புரிய முயற்சிசெய்யாமலே, முத்தி திருவை - மோக்ஷலக்ஷ்மியை, முயங்கநல்கும் - அடையும்படி அருள்கின்ற, கயல்ஆர் பெருதடகண்ணிபங்கார் - கெண்டைமீனையொத்த பெரியநீண்ட கண்களையுடைய பார்வதியை இடப்பாகத்தில்கொண்ட விசுவநாதர், அருள் காசியிலே - எழுந்தருளியிருக்கப்பெற்ற காசி நகரத்திலே, செயலாவது ஒன்று இல்லை - நீங்கள்செய்யத்தக்கது ஒருகாரியமுமில்லை, வாளாநெடுதுயில் செய்யும் - சும்மா நெடுங்காலம் தூங்கிக்கொண்டிருங்கள், (அப்படி தூங்கிக்கொண்டிருப்பினும் தேகமுடிவில்) புவனம்படைப்பவரே - உலகங்களையெல்லாம் படைக்கும் பிரமதேவரும், உங்கள்பயலாகவே - உங்களுடைய

வேலைக்காரப் பையனாகவே, பணிசெய்வார் - நீங்களேவிய வேலையைச்செய் வார், (எ-று)—முத்தியில் சிவசாரூப்பியமடைவீரென்றபடி.

தவமாவது - மனம்பொறிவழிபோகாது நிற்றற்பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கலும், கோடைக்கண் வெயினிலே நிற்றலும், மாரியினும் பனி யினும் நீர்நிலை நிற்றலும் முதலிய செயல்களைமேற்கொண்டு அவற்ருற்றம் முயிர்க்கு வருந் துன்பங்களைப் பொறுத்துப் பிறவுயிர்களை யோம்புதல். செய லாவதொன்றிலை யென்பது அவ ரருள்கொள்ளுதற் கேதுவாக நீங்கள் செய்யுந் திருப்பணியொன்றுமில்லை யென்றபடி. வாளா - அத்தவத்தைச் செய்யாமல். பயல் - சிறுவன். (உஉ)

[பதி. கட்டளைக்கலிப்பா.]

படுத்தபாயுடனேபிணிமூழ்கினும்
  பல்விழுந்துநரைத்தறமூப்பினும்
அடுத்ததிங்கிவர்க்கேபெருவாழ்வெனு
  மப்பெரும்பதியெப்பதியென்பிரேல்
விடுத்துவிட்டிந்திரதிருவும்புவி
  வெண்குடைக்குளிடுமரசாட்சியுங்
கடுத்ததும்புகளத்தரைத்தேடுவார்
  காதலித்துவருந்திருக்காசியே.

(இ-ள்.) படுத்த பாய் உடனே - படுத்துக் கொண்டிருக்கின்ற பாயலோடு, பிணிமூழ்கினும்-வியாதியாகியகடலிலே ஆழ்ந்தாலும், பல்விழுந்து - பல்கழ ன்று, நரைத்து - மயிர்வெளுத்து, அறமூப்பினும்-மிகவும் முதுமை யடைந்தா லும், அடுத்தது இங்கு இவர்க்கு ஏ பெருவாழ்வு எனும் - இந்நகரத்தார்க்கு இப்பொழுதே வீட்டுலக வாழ்க்கை பொருந்திற்று என்று சொல்லப்படு கின்ற, அ பெரு பதி - அப்படிப்பட்ட பெருமையையுடைய நகரம், எ பதி என்பிர் ஏல் - எந்நகரமென்று கேட்பீராகில், இந்திரதிரு உம் - தேவேந்திர னுகவீற்றிருந்து சுவர்க்கத்தையாளுஞ் செல்வத்தையும், புவி - பூமியிலிருந்து, வெண்குடைக்குள் - வெண்கொற்றக் குடைநிழலில்நின்று, இடும் அரசாட் சியும் - ஆளுகின்ற இராச்சிய பாரத்தையும், விடுத்துவிட்டு - நீக்கி, (அவர் கள்) கடு ததும்பு களத்தரை - விஷம் நிறைந்த கண்டத்தையுடைய சிவபெரு மானை, தேடுவார் - தேடுபவர்களாய், காதலித்துவரும் - விரும்பிவருகின்ற, திருகாசியே - அழகிய காசிநகரமே, (எ-று.)

எழுந்திருக்கவுஞ்சக்தியில்லாமலென்பார்படுத்தபாயுடனேயென்றும், நோய், மேல் நோயென்பார் பிணிமூழ்கினுமென்றும், வீட்டுலகவாழ்க்கையென்பார் பெருவாழ்வென்றும், சீவன் முக்தராவரென்பார் இவர்க்கிங்கே பெருவாழ் வென்றும், இது எல்லாவுலகத்தாருஞ் சொல்லும் பிரசித்தமான விஷயமெ ன்பார் எனும் என்றும், இப்பெருமை பிற திருப்பதிகட்கில்லை யென்பார் அப்பெரும்பதியென்றும், விடுத்தலரிதாகலாலும், இவ்வாழ்வை நோக்குமிட த்து அவை நரகமெனலாந் தன்மையவாகலாலும் விடுத்து விட்டென்றும், தேவர்வேண்டுகோளை வீணுக்காது அருளால் செயற்கருஞ் செயலைச்செய்தவ ரென்பார் கடுத்ததும்புகளத்தரென்றுங் கூறினர். மூப்பு, மூ - பகுதி. அக ரச்சுட்டு உலகறிபொருண்மேற்று. தேடுவார் - வினையெச்சமுற்று. (உ௩)

[கட்டளைக்கலித்துறை.]

திருக்கோலங்கொண்டநற்றேன்மொழியாளெண்டிசையினுநின்
உருக்கோலமேகண்டுங்கண்டிலள்போலுமொழுகுநறை
மருக்கோலநீலக்குழல்சேரவிமுத்தவாணதொல்லை
இருக்கோலமிட்டுணராயெங்குமாகியிருப்பதுவே.

(இ-ள்) ஒழுகும்நறை - வீசுகின்ற செயற்கைவாசனையையும், மரு - இயற்கைவாசனையையும், கோலம் - அழகையும், நீலம் - கருமையையு முடைய, குழல் - கூந்தலையுடைய பார்வதி தேவியானவள், சேர் - (ஒருபக்கத்தில்) பொருந்திய, அவிமுத்தவாண - காசீ நகரத்தில் எழுந்தருளி யிருப்பவனே, தொல்லை இருக்கு ஓலமிட்டு உணராய் - பழமையான வேதங்களாலும் துதிக்கப்பட்டு அறியாமலிருப்பவனே, திரு கோலம்கொண்ட நல் தேன் மொழியாள் - இலக்குமியினுடைய உருவம்போன்ற உருவத்தைக்கொண்ட இனிய தேன்போன்ற சொற்களையுடைய இந்தப்பெண், எண்திசையினும் - எட்டுத் திக்குகளிலும், நின் உரு கோலமே - உன்னுடைய அழகையுடைய திருவுருவத்தையே, கண்டும் - (உருவெளித்தோற்றத்தால்) பார்த்தும், எங்கும்ஆகி இருப்பது - எல்லாவிடங்களிலும் அந்தர்யாமியாயிருப்பதை, கண்டிலள் போலும் — அறியாள்போலும், (எ-று.)

அறிந்தாளாயின் தன்னிடத்திலுமிருக்கிறுரென்று மகிழ்வாளென்பது கருத்து. திரு - திருமகள். புதுத்தேனென்பார் நற்றேனென்றார். எண்டிசையாவன ;—கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு என்பன ; பூமி ஆகாய மிரண்டுடன் சேர்ந்து பத்து திக்கு எனவும்படும். திசை - திசா என்னும் வடமொழி ஆவீறையாயிற்று. ஒழுகுநறை - சூடப்பட்ட பூவிலிருந்து பெருகு மதுவுமாம். ஒழுகுநறைமருக்கோல நீலக்குழல் - அன்மொழித்தொகைப் பண்மொழித்தொடர் ; ஆகுபெயருமாம். வாண - வாழ்நவென்பதன் மரூஉ. தேன்மொழி - அல்வழியில் இயல்பாயிற்று. (உச)

[இதுவுமது.]

இருகுங்குமக்குன்றும்பீர்பூப்பக்காமவெரியினினின் [துச்
றுருகும்பசும்பொன்னுக்கோர்மாற்றுண்டேனுரையாய்தொடுத்
செருகுநறுங்கொன்றைதேன்பிழிந்தூற்றச்சிறைச்சுரும்பர்
பருகும்பொலஞ்சடையாய்காசிவாழ்முக்கட்பண்ணவனே.

(இ-ள்.) தொடுத்து செருகும் நறு கொன்றை - மாலையாகத் தொடுத்துச் சூட்டிய மணக்கின்ற கொன்றைமலர், தேன் பிழிந்து ஊற்ற - மதுவை வடித்துக்கீழேயொழுக்க, சிறைசுரும்பர்பருகும் - (அதனை) இறகுகளையுடைய வண்டுகள் குடிக்கின்ற, பொலஞ்சடையாய் - பொன்போற் சிவந்த சடையையுடையவனே, காசிவாழ் - காசீநகரத்தில் எழுந்தருளியிருக்கின்ற, முக்கண்பண்ணவனே - (சூரியசந்திராக்கினியென்னும் முச்சுடர்களாகிய) மூன்று திருக்கண்களையுடைய கடவுளே, இரு குங்குமம் குன்றும் - குங்குமத்தை யணிந்த இரண்டு மலைபோன்ற முலைகளிலும், பீர்பூப்ப - பசலைநிறம் பரவும்படி, காமம் எரியினில் நின்று - காமமாகிய அக்கினியில் தங்கி, உருகும்.

கரைகின்ற, பசும் பொன்னுக்கு - (இப்பெண்ணாகிய) பசும் பொன்னுக்கு, ஓர்மாற்று உண்டு எல் - ஒரு எதிர் உண்டானால், உரையாய் - சொல்வாயாக.

குன்று - உவமவாகுபெயர். ஆகுபெயர்ப் பொருளுக்கேற்பக் குங்குமமென்னும் அடைமொழிகொடுத்தார். இருகுன்றெனக்கூட்டுக. பீர் - காமத்தாலுண்டாகும் பசலையென்னும் ஓர்நிறம்; அது அழகைத்தருதலால் பூப்பவென்றார். பூத்தல் - பொலிவுபெறப் பரவுதல். கிடைத்தற் கருமையால் பெண்ணைப் பொன்னென்று உருவகப்படுத்தினர். பெண்ணிற்கு உருகுதல் - மனங்கரைந்து வாடுதல். மாற்று - மாற்றுவது; பொன்னின்தரமுமாம். உண்டு - ஐம்பான் மூவிடத்துக்கும்பொதுவாகிய குறிப்பு வினைமுற்றுப்பகாப்பதம். உரையாய் - உடம்பாட்டு ஏவன்முற்று. சுரும்பர், அர் - ஈற்றுப்போலி. பொன்னென்பது பொலமென ஈறுதிரிந்தது. (உரு)

[கலிநிலைத்துறை.]

பண்ணேர்வேதம்பாடியகாசிப்பதியாயிப்
பெண்ணேரொருவனெய்கணையைந்தும்பெய்தானால்
உண்ணேர்நின்றாயின்னருளாலென்னுயிரன்னாள்
கண்ணேர்நிற்றற்கொல்கியொழிந்தகழுநீரே.

(இ ள்.) பண்ஓர் வேதம்பாடிய காசிபதியாய் - இசைபொருந்திய வேதத்தால் பாடிப்புகழப்படுகின்ற காசிநகரத்தில்எழுந்தருளியிருப்பவனே, இன் அருளால் - இனியகருணையினால், உள்நேர்நின்றாய் - அடியாரது உள்ளத்தில் முன்னாக வீற்றிருப்பவனே, இ பெண் - இந்தப் பெண்ணிற்கு, நேர் - விரோதமாக, ஒருவன் - ஒப்பற்ற மன்மதன், எய்கணை ஐந்தும் - எய்தற்குரிய ஐந்து பாணங்களையும், பெய்தான் - சொரிந்தான்; ஆல் - ஆதலால், என் உயிர் அன்னாள் - என்னுயிரையொக்கும் இப்பெண்ணினது, கண் - நேத்திரங்களாகிய, கழுநீர் - செங்கழுநீர் மலர்கள், நேர்நிற்றற்கு-நீ எதிரேவந்து சேவைசாதித்தற்காக, ஒல்கி - தளர்ந்து, ஒழிந்த - அழிந்தன, (எ - று.)

பண்ணேர் வேதமென்றது - சாமவேதத்தை. பாடிய என்பது பதியானுக்கு அடை. கருப்புவில்லையும் புஷ்பபாணங்களைந்தனையுங்கொண்டே மும்மூர்த்தி முதலாக மூவுலகங்களையும் வெல்லுதலால் ஒப்பற்றவனென்றார் மன்மதனை. ஒருவன் - ஒருத்தனுமாம். எய்கணையைந்தாவன;—வனசம், சூதம், அசோகு, முல்லை, நீலம்; இவற்றின்பெயர் - முறையே உன்மத்தம், மதனம், சம்மோகம், சந்தாபம், வசிகரணம். இவை செய்யுமவத்தை, சுப்பிரயோகம், விப்பிரயோகம், சோகம், மோகம், மரணம்; அவையாவன - சுப்பிரயோகம், சொல்லும்நினைவும்,—விப்பிரயோகம், வெய்துயிர்த்திரங்கல்,—சோகம், வெதுப்புந்துய்ப்பன தெவிட்டலும்,—மோகம், அழுங்கலு மொழிபலபிதற்றலும், மரணம், அயர்ப்பு மயக்கமும். இவ்வைவகை யம்புகளையுங்கூட்டங்கூட்டமாகச்சொரிந்தானென்பார், பெய்தானென்றார். அருளால் நேர்நிற்றற்கென்றுங்கூட்டலாம். ஒழிந்த - வாடினவென்றபடி. வேதம் - நன்மைதீமைகளை அறிவிப்பது. இனி, பதியாய், அருளால் உள் நின்றாய், கழுநீர் மலர் என்னுயிரன்னாள் கண்களின் முன்நிற்றற்குத்தளர்ந்து தோற்றன, இத்தகைய அழகினையும் மென்மையினையுமுடைய பெண்ணிற்குநேராய் ஒருவன் கணையைந்தும் பெய்தான், இனி இம்மகளிடத்துத் தலையளிசெய்வாயாக எனவு முரைக்கலாம். (உகூ)

[கட்டளைக்கலித்துறை.]

கழியுந்தலைக்கலன்பூண்டாடுங்காசிக்கடவுணுதல்
விழியுமிடக்கண்ணும்வெண்ணெருப்பேயவ்விழியிரண்டிற்
பொழியுங்கனல்விழிகாமனைக்காய்ந்ததப்போரிலுடைந்
தொழியும்படைகளென்றோவெமைக்காயுமற்றோர்விழியே.

(இ-ள்.) கழியும் தலைகலன்-இறந்ததலைகளாகிய ஆபரணங்களை, பூண்டு - அணிந்து, ஆடும் - நர்த்தனஞ்செய்கின்ற, காசிக்கடவுள் - காசிநகரத்திலெழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானது, நுதல்விழியும் - நெற்றிக்கண்ணும், இடக்கண்ணும் - இடதுகண்ணும், வெள்நெருப்பே - வெள்ளிய நெருப்புத்தான், அ விழி இரண்டில் - அந்தவிரண்டுகண்களில், பொழியும்கனல் விழி - சிந்துகின்ற அக்நிச்சுவாலையை யுடையநெற்றிக்கண், காமனை - மன்மதனை, காய்ந்தது - எரித்தது ; மற்று ஓர்விழி - மற்றொருகண் [இடதுகண்], அப்போரில்- அந்தயுத்தத்தில், உடைந்து ஒழியும் படைகள் என்றோ - தோற்றுப்போகின்ற அம்மன்மதன்சேனையென்று எண்ணியோ, எமைகாயும் - எம்மையிப்பொழுது எரிக்காநின்றது, (எ - று.)

இறந்தவர்தலையைக்கழியுந்தலையென்றா ரிலக்கணையால் கழியும் - மிக்க வென்றுமாம். கடவுள் - எல்லாவற்றையுங்கடந்தவர், தொழிலாகுபெயர் ; கடவுள் - கடத்தல் ; கட - பகுதி, உள் - தொழிற்பெயர்விகுதி. காமநோய் கொண்டதன்னை யெரித்தலால் சந்திர ரூபமாகிய இடக்கண்ணையு நெருப்பே யென்றாள். கனல் பொழியும் விழியென்றுங்கூட்டலாம். அப்போர் - முன் மன்மதனுக்கும் சிவனுக்கும் நடந்தபோர். எமை - தனித்தன்மைப்பன்மை.

[மடக்கு. அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

விழைகுவதன்பரகஞ்சுகமேவெங்கரியினுரிகஞ்சுகமே
தொழிலடிகட்குளமாலயமேதூமுனிவோருளமாலயமே [ணியே
அழகமரும்பணியென்பணியேயாட்கொளமேற்கொள்வதென்ப
மழகளிறீன்றவளம்பதியேவாழ்வதுகாசிவளம்பதியே.

(இ-ள்.) மழகளிறு ஈன்றவள் - இளமையையுடைய யானையை [விநாயகரை] பெற்றபார்வதிதேவியினது, அம்பதியே-அழகிய தலைவா, (நீ), சுகம்-இன்பமாக, விழைகுவது - விரும்புவது, அன்பர் அகம் - பக்தர்களின் மனம்; கஞ்சுகம் - (உனது) சட்டை, வெம்கரியின் உரி - கொடியயானையின் தோல் ; அடிகட்கு உளதொழில்-சுவாமியாகிய வுனக்கு உள்ளகிருத்தியம், மாலயம் - பெருமைபொருந்தியலயம்[சர்வசங்காரம்];ஆலயம்-(உனக்கு)இருப்பிடமாகிய கோயில், தூமுனிவோர் உளம் - பரிசுத்தமான இருடிகளது மனம் ; அழகு அமரும் பணி - (உனது)அழகு பொருந்திய ஆபரணம், என்பு அணி - எலும்புக்கூட்டம் ; ஆட்கொளமேற்கொள்வது - (நீ) அடிமையாகக்கொள்ளும்படி தலைப்படுவது, என்பணி - எனது வேண்டுகோள் ; வாழ்வது - (நீஉகந்து) எழுந்தருளியிருக்குமிடம், காசிவளம்பதி-காசி யென்னும் வளமையை யுடைய நகரம், (எ - று.)

உரி - உரிக்கப்படுவது, செயப்படுபொருள் காட்டும் ஐகார விகுதி புணர்ந்து கெட்டது ; கெடாக்கால் உரிவை யென்றிருக்கும். லயம் - மறைத்தல்,

என்றது திரோபவத்தை, அது சங்காரம், அனுக்கிரகம் என்பவைற்றிற்கும் உபலக்ஷணம். முனிவர் - ஒரோவழி அகரம் ஒகாரமாயிற்று. ஈன்றவள், ஈன் - முதனிலை. மழகளிறீன்றவளம்பதியே, ஏகாரம் - விளியுருபு. மற்ற வை - அசையும், இசைநிறையும், ஈற்றசையுமாம். இது மடக்கென்னு மலங் காரம்; அஃதாவது வந்தமொழியே மடங்கி மீண்டுவருவது. இனி விழைகு வதன்பரகஞ்சுகமே என்பதற்கு அன்பர்மனம் விரும்புவது நிரதிசயானந்தமே எனவும் பொருள்கொள்ளலாம். (உஅ)

[மடக்கு. கட்டளைக்கலிப்பா.]

வண்ணமேனியரும்புவனங்களேவாசம்வாசமரும்புவனங்களே, நண்ணுமாலயமாதவரங்கமேஞாலமேழ்தருமாதவரங்கமே, தண்ணென்மாலைதருமருக்கொன்றையேதருவதையர்தருமருக்கொன்றையே, கண்ணினிற்பர்மனத்திருக்கோயிலேகாசியேயவர்க்கோர்திருக்கோயிலே.

(இ-ள்.) (சிவபெருமானது) வண்ணம் மேனி - அழகிய திருமேனியாவது, அரும் புவனங்கள் - அருமையாகிய உலகங்கள்; வாசம் - இருப்பிடம், வாசம் அரும்பு வனங்கள் - வாசனைபொருந்தியகாடுகள்; நண்ணும் ஆலயம் - பொருந்திய கோயில், மாதவர் அங்கம் - மிகுந்ததவத்தையுடைய இருடிகளது மனம்; ஞாலம் ஏழ்தரும்மாது - ஏழுலகங்களையும் பெறுகின்றபார்வதி, அவர் அங்கம் - அவருடைய உடலினது ஒருபாகம்; தண்ணென்மாலை-குளிர்ந்த பூத் தொடை, தருமருகொன்றை - வாசனையையுடைய கொன்றைமரத்தினது மலர்கள்; ஐயர் - அக்கடவுள், ஒன்றை தருவது - ஒன்றைக்கொடுப்பது, தருமருக்கு - தருமி யென்னும் பிராமணனுக்கு; மனம்திருக்கு-நெஞ்சிலுள்ள தீமை, ஒயில் - ஒழிந்தால், கண்ணில் நிற்பர் - (அவர்) கண்களுக்கெதிராக வந்து சேவைகொடுப்பார்; அவர்க்கு ஒர் திரு கோயில் - அவரது ஒப்பற்ற அழகிய ஆலயம், காசி - காசிநகரம், (எ - று.)

புவனங்களென்றது-ஈண்டு உலகங்களையும், அவற்றிலுள்ள சராசரங்களையும். அவைதாம் அளவிலவாய்ச் சொல்லற்கும் எண்ணற்கும் அரியவாகலின் அரு என்னும் அடைமொழிகொடுத்துக் கூறினர். அவற்றினுள் உடலுக்குள் உயிர்போல் அந்தர்யாமியாயிருத்தலால், வண்ணமேனி யரும்புவனங்களென் றார். வனங்களென்றது ஆநந்தவனமுதலியவற்றை. மாதவரங்கமென்றது - அவரங்கங்களுட்சிறந்தமனத்தை. ஞாலமேழ் ஆவன ;—பூலோகம், புவலோகம், சுவலோகம், மகோலோகம், சனலோகம், தபோலோகம், சத்தியலோகம் என்னும் மேலுலகுஏழு. இவற்றுள் பூலோகம் என்றதனுள் அதலம், விதலம், சுதலம், தலாதலம், இரசாதலம், மகாதலம், பாதாளம் என்னுங் கீழுலகேழும் அடங்கின வென்பர் வடநூலார்; ஆகவே பதினாலுலகுமடங்கின; அன்றி, ஞாலமேழ் என்றதனைக் கீழுலகேழிற்கும் மேலுலகேழிற்கும் பொதுவாகவுங் கொள்ளலாம். மாது - மாதரென்பதன் விகாரம், மாதர் - அழகென்னும் பொருளினையுடையதோருரிச்சொல்; அது இங்கு ஆகுபெயராய்ப் பெண் ணையுணர்த்திற்று. தண்ணெனல் - சீதக்குறிப்பு. மருத்தருக்கொன்றை யெனக்கூட்டுக, மருத்தருங்கொன்றையென்றும் உரைக்கலாம். சிவபெருமான் தமதன்பனாகிய தருமியென்னும் பிராமணனுக்குப் பொற்கிழி கொடுத்தற்பொருட்டு "கொங்குதேர் வாழ்க்கையஞ்சிறைத்தும்பி, காமஞ்செப்பாது கண்டது

மொழிமோ, பயிலியது கெழீஇயநட்பின், மயிலியற்செறியெயிற்றரிவை கூந்தலி, னறியவு முளவோ நீயறியும் பூவே" என்னுந்திருமுகப் பாசுரத்தை அருளிச்செய்து கொடுத்தலால், தருவதையர்தருமருக்கொன்றையே யென்றார். ஐயர் யமனுக்குக்கொடுத்தது ஒருஉதையை யென்றுஞ்சொல்லலாம். அப்பொழுது தருமன் - யமன், நல்லன தீயன செய்தார்க்கு அவற்றின் பயனைப் பக்ஷபாதமின்றி நடுவு நோக்கிக் கொடுத்தலால் தருமனெனப்பெயர்; மங்கலவழக்கென்பாரு முளர். தருமனென்றது தருமரென்றது இகழ்ச்சி; தோற்றுவிட்டதறுதல், உயர்வாகாது. திருக்கு - காமம், வெகுளி, மயக்கம் என்பன. அவர்க்கு - உருபுமயக்கம். ஏகாரங்கள் - இசைநிறை. (௨௯)

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

திருகுசினக்கூற்றினெயிற்றிடைக்கிடந்துங்கடைநாளிற்றிரையே
ழொன்றாய்ப், பெருகுமுழுநீத்தத்திற்றிளைத்தாடப்புணைதேடும்பே
தைநெஞ்சே, உருகிலைநெக்குடைந்திலைமொண்டாநந்தவனத்தேனை
யோடியோடிப், பருகிலைகண்ணரும்பிலைமெய்பொடித்திலைமற்றுனக்
கென்னபாவந்தானே.

(இ-ள்.) திருகுசினம்கூற்றின் - முறுகுகின்ற கோபத்தையுடைய யமனது, எயிற்றிடை - பற்களில், கிடந்தும் - அகப்பட்டுக்கிடந்தும், கடைநாள் - யுகாந்தகாலத்தில், திரைஎழ் - எழுசமுத்திரங்களும், ஒன்றாய் - ஒன்றாகிச்சேர்ந்து, பெருகும் - பாய்கின்ற, முழுநீத்தத்தில் - பெருவெள்ளத்தில், திளைத்து ஆட - மூழ்கிவிளையாடுதற்கு, புணைதேடும் - தெப்பத்தைத்தேடுகின்ற, பேதை நெஞ்சே - அறிவின்மையையுடையமனமே, (நீ) உருகிலை - (சிவபெருமான் விஷயமாக) கரைந்தாயில்லை, நெக்கு உடைந்திலை - நெகிழ்ந்துவிண்டாயில்லை, ஆநந்தவனம்தேனை - ஆனந்தவனத்திலுள்ள (பரமசிவத்தின்பேரானந்தமாகிய) மதுவை, ஓடிஓடி - விரைந்துசென்று சென்று, மொண்டு - முகந்து, பருகிலை - குடித்தாயில்லை, கண்அரும்பிலை - கண்களினின்றும் ஆநந்தக்கண்ணீர் பெருகப்பெற்றாயில்லை, மெய்பொடித்திலை - உடம்பினில் மயிர்க்கூச்செறியப்பெற்றாயில்லை, (ஆதலால்) உனக்கு என்னபாவம் - (இப்படிப்பட்ட நற்றொழிலைச்செய்யவொட்டாமற்றடுக்க) உனக்குநேரிட்ட தீவினையாது? (எ-று.)

திரை - அலை; அது இங்கு ஆகுபெயராய்க் கடலையுணர்த்திற்று. கடலேழாவன;—உவர்நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன் என்பன. மகாபிரளயமென்பார், முழுநீத்தமென்றார். பரமசிவனிடத்து அன்புடைமைக்கு அடையாளம், அவரது உண்மையை நினைத்தல் கேட்டல் காண்டல்செய்தபொழுதே தன்வசம் அழிதலும், மயிர்க்கூச்செறிதலும், ஆநந்தக் கண்ணீர்பெருக்கலும், விம்மலும், நாத்தழும்பலும், உரைதடுமாறலும், ஆடலும், பாடலும், அவர் உவப்பனசெய்தலும், வெறுப்பன ஒழிதலும், பிறவும் ஆதலின், அவ்வன்பு மனத்தினிடத்தில்லை யென்பார் "உருகிலை...பொடித்திலை" என்றார். புண்ணிய முண்டாயின் அன்பு உண்டாகுமாதலால், 'உனக்கென்னபாவம்' என்றார்; உனக்கு அபிப்பிராயம் என்னவென்றும்பொருள் கொள்ளலாம். மற்று - வினைமாற்று; அசையுமாம். ஓடியோடி - விரைவால் இரண்டடுக்கிற்று; உவகையாலுமாம். மெய்யல்லாதவுடலை மெய்யென்பது மங்கலவழக்கு. தான், ஏ - அசைகள். நெக்கு - வினையெச்சம், நெகு-

முதனிலை. மொண்டு, மொள் - முதனிலை. தேனென்றூர், அன்பர்க்குத்தித் தித்தலால். (௩௦)

[நேரிசைவெண்பா.]

பாவலருநாவலரும்பண்மலரக்கண்மலருங்
காவலருமேடவிழ்க்குங்காசியே—தீவளருங்
கஞ்சக்கரத்தான்கலைமறைக்குநாயகமாம்
அஞ்சக்கரத்தானகம்.

(இ-ள்.) தீவளரும்-நெருப்புப்போன்ற மழுப்பொருந்திய, கஞ்சம்கரத்தான்-தாமரைமலர்போன்ற திருக்கையையுடையவனும், கலை மறைக்கு - சாத்திரங்களுக்கும் வேதத்திற்கும், நாயகம் ஆம்-தலைமையாகிய, அஞ்சுஅக்கரத்தான் - பஞ்சாக்ஷரத்தையுடையவனுமாகிய சிவபெருமானது, அகம் - இடம், பாவலர்உம் - கவிகளும், நாவலர்உம் - கற்றவரும், பண்மலர - பாட்டுப்பாட, கண் மலரும் - பூக்கின்ற, கா அலரும் - சோலைகளிற்பொருந்திய, ஏடு - மலர்கள், அவிழ்க்கும் - மலருகின்ற, காசி - காசிநகரம் (ஆகும்); (எ-று.)

பா - பாட்டு; அதில்வல்லவர் - பாவலர். கண்மலர்தல் - பூத்தல், கண் - உபசர்க்கம். கண்மலரும் - விளங்குமென்று உரைத்துக் காவோடு கூட்டலுமாம். இசைப்பாட்டிஞல் மரந்தளிர்க்குமென்றல்மரபு; இதனுல் பண்மலர ஏடவிழ்க்கு மென்றூர். இனி, கண்மலரும் ஏடு அவிழ்க்கும் அருங்காவற்காசியென்றுங் கூட்டியுரைக்கலாம்; அருங்காவல் - கடப்பதற்கரியகாவல். ஏ - அசை. ஏடு - இதழ்; அது ஈண்டு ஆகுபெயர். தீ - உவமவாகுபெயர். கஞ்சம் - சலத்தில் உண்டாவது; காரணவிடுகுறிப்பெயர். அஞ்சு - ஐந்தென்பதன்போலி. (௩௧)

[இதுவுமது.]

அகமேயவிமுத்தமையரிவர்க்காகஞ்
சகமேழுமீன்றெடுத்ததாயே—மிகமேவும்
எண்ணம்பரமேயெமக்களித்தன்முச்சுடருங்
கண்ணம்பரமேகலை.

(இ-ள்.) ஐயர் இவர்க்கு - இந்தச்சிவபெருமானுக்கு, அகம் - இருப்பிடம், அவிமுத்தம் - காசி; ஆகம் - உடம்பிலொருபாகம், சகம் எழும் - ஏழு உலகங்களையும், ஈன்று எடுத்த - பெற்றுவளர்த்த, தாய் - தாயாகியபார்வதி; எமக்கு அளித்தல் - எங்களுக்குக் கொடுப்பது, எண்மிகமேவும் - தியானித்தல் மிகவும்பொருந்திய, அம் பரம்-அழகியபரமபதம்; கண்-நேத்திரங்கள், முச்சுடரும் - (சந்திர சூரியாக்கினி களென்னும்) மூன்று ஒளிகள்; கலை - வத்திரம், அம்பரம் - திக்குக்கள், (எ-று.)

எண்ணம்மிகமேவும் பர மென்றலுமாம்; பரம் - மோக்ஷம். எமக்கெனப் பன்மையாற் கூறிஞர், தமது குலத்திலுள்ள பிதிருக்களையுங் கூட்டி. ஏகாரங்கள் - அசை. திகம்பரனென்பதோர் பெயர்பற்றி, அம்பரமே கலை யென்றூர். சகம் - ஜகத் என்னும் வடமொழிச்சிதைவு. (௩௨)

[அம்மானை. மடக்குத்தாழிசை.]

கலைமதியின்கீற்றணிந்தகாசியகிலேசர்
சிலைமதனைக்கண்ணழலாற்செற்றனர்காணம்மானை
சிலைமதனைக்கண்ணழலாற்செற்றனரேயாமாகின்
மலைமகட்குப்பாகம்வழங்குவதேனம்மானை
வழங்காரோவப்பாலுமாலானாலம்மானை.

(இ-ள்.) கலை மதியின் கீறு அணிந்த - கலைகளையுடைய மூன்றாம் பிறைச் சந்திரனைத் தலையிற்சூடிய, காசி அகிலேசர் - காசி விசுவநாதர், சிலைமதனை - கருப்புவில்லைத்தாங்கிய மன்மதனை, கண் அழலால் - தமது நெற்றிக்கண் நெருப்பால், செற்றனர்காண் - அழித்தார்; அம்மானை—; (அவர்) சிலைமதனைக்கண்ணழலாற்செற்றனரேயாமாகின் - கருப்புவில்லைத் தாங்கிய மன்மதனை நெற்றிக்கண் ணெருப்பால் அழித்தாராயின், மலைமகட்கு - பார்வதிக்கு, பாகம் - ஒரு பாதியை, வழங்குவது - கொடுப்பது, என் - எதனால்? அம்மானை—; அப்பாலும் - பின்பும், மால் ஆனால் - மோகம் உண்டானால், வழங்காரோ - கொடாரோ? (எ-று.)

கலை - சந்திரன் பங்கு. கீறு-கீறல், பிளவு. ஏ, ஆம் - அசைகள். அப்பாலுமாலானால் என்பதற்கு அப்பாகமும் விஷ்ணுவாயினாலென்றும் பொருள்கொள்க.

[கட்டளைக்கலித்துறை.]

அம்மனைதம்மனையாத்திருக்கோயிலவிமுத்தமா
எம்மனையாய்த்தந்தையாயிருந்தாரடிக்கீழிறைஞ்சீர்
நம்மனைமக்களென்றேக்கறுப்பீருங்களுநாளுலந்தாற்
சொம்மனைவைத்தெப்படிநடப்பீர்யமன்றூதரொடே.

(இ-ள்.) அம்மனை - (உலகங்களுக்கெல்லாந்) தாயாகிய பார்வதி, தம்மனை ஆ - தமது மனைவியாகவும், திரு கோயில் - அழகியஆலயம், அவிமுத்தமா - காசீ நகரமாகவும், எம் அனை ஆய் - எமது தாயாகியும், தந்தைஆய் - தந்தையாகியும், இருந்தார் - இருக்கும் பரமசிவனது, அடிக்கீழ்-திருவடிகளில், இறைஞ்சீர் - வணங்காதவராகி, நம்மனை மக்கள் என்று - (நமதல்லாதவற்றை) நமது வீடு நமது பிள்ளைகள் என்று மயங்கி, ஏக்கறுப்பீர் - (அவற்றிற்காகத்) தாழ்ந்து நிற்பவர்களே! (நீங்கள்) உங்கள்நாள் உலந்தால் - உங்களுடைய ஆயுளுள் முடிந்தால், சொம்மனை - உடைமையை, வைத்து - இங்கே வைத்துவிட்டு, யமன் தூதரொடு - யமதூதர்களோடு, எப்படி - எவ்வாறு, நடப்பீர் - செல்வீர்கள்?

மனை - மனைவிக்கு ஆகுபெயர். அனை - அன்னை. ஏக்கறுத்தல் - அங்கலாய்த்தல், ஒருசொல். சொம் - உடைமை, உரிமைப் பொருள்; ஸ்வம் என்னும் வடமொழிச்சிதைவு: அன் - சாரியை. இறைஞ்சாதவர் நரகமடைதல் திண்ணமென்பதனை உறுதிப்படுத்த, யமன் றூதரொடு என்றார். நம்மனை, மனை - மனைவியுமாம். நம் என்பதனை மக்களென்பதனோடுங் கூட்டுக. (௩௪)

[கட்டளைக் கலிப்பா.]

தூதுகொண்டுந்தமைத்தோழமைகொண்ட
தொண்டர்தண்டமிழ்ச்சொற்கொண்டகுண்டலக்
காதுகொண்டெங்கவிதைகொண்டாட்கொண்ட

காசிநாதர்கருத்தேதறிகிலேம்
போதுகொண்டொருபச்சிலைகொண்டுதான்
பூசைசெய்திலர்புண்டரிகப்பதம்
ஏதுகொண்டுகொடுப்பர்கொடுப்பரே
லிருவருக்குமற்றென்படுநெஞ்சமே.

(இ-ள்.) தமை - தம்மை, தூதுகொண்டும் - தூதனாகக்கொண்டும், தோழமைகொண்ட - நண்பனாகவுங்கொண்ட, தொண்டர் - சுந்தரமூர்த்தி நாயனாருடைய, தண்தமிழ்சொல் - குளிர்ந்த தமிழ்ப்பாட்டை, கொண்ட - கேட்ட, குண்டலம்காதுகொண்டு - குண்டலங்களை யணிந்த திருச்செவி களினால், எம் கவிதைகொண்டு - எம்முடைய பாவைக்கேட்டு, ஆட்கொண்ட - அடிமை கொண்ட, காசிநாதர் கருத்து - காசியிலெழுந்தருளி யிருக்கின்ற சிவபெருமானது எண்ணம், ஏது - ஏதுவோ? அறிகிலேம் - (யாம்) அறியோம்; (அவர்), (ஒரு) போதுகொண்டு - ஒரு புஷ்பத்தினாலும், ஒரு பச்சிலைகொண்டு - ஒருபச்சையிலையினாலும், பூசை செய்திலர் - (எம்மால்) ஆராதனை செய்யப்பட்டவரல்லர்; (எமக்கு) புண்டரிகம்பதம் - திருவடித்தாமரைகளை, ஏதுகொண்டு - யாது காரணத்தைக்கொண்டு, கொடுப்பர் - தருவர்? கொடுப்பரேல் - அவ்வாறு தருவாரானால், இருவருக்கும் - இரண்டு பேருக்கும், நெஞ்சம் - மனம், என்படும் - என்ன தோன்றப்பெறும், (எ-று.)

போது - கொன்றைப்பூ முதலியன. பச்சிலை - பில்வபத்திரமுதலியன. புண்டரிகப்பதங் கொடுத்தல் - திருவடிகளிருக்கு மிடமாகிய முத்தியைக் கொடுத்தல். சுந்தரமூர்த்தி நாயனார், திருவாரூரில் வன்மீகநாதரை வணங்கிப் பதிகம்பாடும்பொழுது, அவர்கேட்கும்படி வன்மீகநாதருடைய திருவருளினாலே, "நாம் உனக்குத்தோழரானோம், முன்னே நாம்உன்னைஆட்கொண்ட விவாககாலத்திலே நீ கொண்டமணக்கோலத்தை எப்பொழுதுங்கொண்டு பூமிமேல் விளையாடுவாய்" என்று ஒரு அசரீரிவாக்கு எழுந்தமையாலும், சுந்தரமூர்த்திநாயனார், திருவொற்றியூரிலே சங்கிலியாரை விவாகஞ்செய்துகொண்டிருந்தசங்கதியைக் கேள்வியுற்று அதிக துக்கமுங் கோபமுங்கொண்டிருந்த பரவையாரிடத்திற் பரமசிவனைத் தூதனாக அனுப்பினமையாலும், அவரை "தூதுகொண்டுந்தமைத் தோழமைகொண்டதொண்டர்" என்றார்.

[சித்து. நேரிசைவெண்பா.]

ஏடவிழ்பொற்கொன்றையகிலேசரன்பர்க்கேயிருப்பை
ஆடகமாக்கிக்கொடுத்தோமவ்வளவோ—நீடுதிறல்
காட்டுமிமையோர்க்கிருப்புகற்கனகமாக்கியண்ட
ஒட்டினையும்பொன்னாக்கினோம்.

(இ-ள்.) ஏடு அவிழ் பொன் கொன்றை அகிலேசர் - இதழ்கள்விரியப்பெற்ற பொன்னிறமாகிய கொன்றைமலரையணிந்த விசுவநாதரது, அன்பர்க்கே - பக்தர்களுக்கு, இருப்பை - இரும்பை, ஆடகம் ஆக்கி கொடுத்தோம் - பொன்னாகச் செய்துதந்தோம்; அவ்வளவோ - அதுமாத்திரமோ, நீடுதிறல் காட்டும் இமையோர்க்கு - மிக்கவல்லமையைக் காண்பிக்கின்ற தேவர்களுக்கும், இருப்பு - இருப்பை, கனகம் கல் ஆக்கி - பொற்கட்டியாகச்செய்து, அண்டம் ஒட்டினையும் பொன் ஆக்கினோம் - முட்டை ஓட்டினையுஞ் சுவர்ணமாகச்செய்தோம், (எ-று.)

இநுசித்து; அதாவது மாயவித்தை. ஹாடகம் - ஹகாரம் மொழி முதலில் அகாரமாகத் திரிந்து ஆடக மென்ருயிற்று; கெட்டதென்பாருமுளர். இருப்பை ஆடகமாக்கிக் கொடுத்தோமென்பதற்கு இருப்பிடத்தைப் பொன்னுலகமாக்கித் தந்தோமென்றும், இமையோர்க்கிருப்பு கற்கனகமாக்கியென்பதற்குத் தேவர்களுக்கு இருப்பிடத்தைப் பொன்மலையாகிய மேருமலையாகச் செய்தென்றும், அண்ட ஓட்டினையும் பொன்ணுக்கிஞேமென்பதற்கு அண்ட முகட்டையும் அழகாகச்செய்தோமென்றும், உள்ளுறைப்பொருளுங்கொள்க.

[நேரிசையாசிரியப்பா.]

பொன்னுருக்கன்னபூந்துணர்க்கொன்றையும்
வெள்ளிமுளையன்னவிரிநிலாக்கொழுந்துங்
காந்தண்மலர்ந்தன்னபாந்தளினிரையுந்
திரைசுழித்தெறியும்பொருபுனற்கங்கையில்
வெள்ளிதழ்க்கமலம்வள்ளவாய்விரித்தென
முழுநகைமுகிழ்க்குங்கழிமுடைவெண்டலைத்
தோலடிச்செங்காற்பால்புரைவரிச்சிறைக்
கிஞ்சுகமலர்ந்தசெஞ்சூட்டெகினத்
துருவெடுத்தகல்வான்றுருவியுங்காணுத்
தொன்மறைக்கிழவசென்னிமற்றியானே
கண்டுகொண்டனனிக்கடவுண்மாமுடியெனப்
பெருமகிழ்சிறப்பக்குரவையிட்டார்த்து
வெள்ளெயிறிலங்கவிளைவிற்சிரித்தெனப்
பெருவியப்பிழைக்குமெரிபுரைசடையோய்
ஆள்வழக்கறுக்கும்வாளமர்தடங்கண்
மின்னிழைமருங்குற்சின்மொழிமகளிர்
ஒழுகொளிமிடற்றினழகுகவர்ந்துண்டெனக்
கயிறுகொண்டார்க்குங்காட்சித்தென்ன
மரகதங்காய்த்துப்பவளம்பழுக்குங்
கமஞ்சூற்கமுகின்கழுத்திறயாத்து
வீசொளிப்பசும்பொனூசலாட்டயல்வரப்
பருமணிக்கமுகின்பசுங்கழுத்துடைந்து
நுரைபடுகுருதித்திரடெறித்தென்ன
முழுக்குலைமுரிந்துபழுக்காய்சிதறு
மங்குல்கண்படுக்குமதுமலர்ப்பொதும்பர்க்
கங்கைசூழ்கிடந்தகாசிவாணு
ஐவளிப்பித்தெனுமவைதலையெடுப்ப
மெய்விட்டைவருங்கைவிடுமெல்லையின்
மாமுதறடிந்தகாமருகுழவியும்
பொழிமதங்களையுமழவிளங்களிறு
மூண்டெழுமானம்பூண்டழுக்கறுப்ப

இடக்கையினணைத்துநின்மடித்தலத்திருத்தி
உலகமோரேழும்பலமுறைபயந்தும்
முதிராவிளமுலைமுற்றிழைமடந்தை
ஒண்டொடித்தடக்கையின்வீசுறண்டுகிற்
றோகையிற்பிறந்தநாகிளங்கொன்றன்
மோகமுந்தளர்ச்சியுந்தாகமுந்தணிப்ப
மறைமுதற்பொருளினிறைசுவையமுதினை
அஞ்செவிமடுத்தூணையூட்டிநின்
குஞ்சிதவடிக்கீழ்க்குடியிருத்துகவே.

(இ-ள்.) பொன் உருக்கு அன்ன கொன்றை பூ துணரும் - பொன் உருக்குப்போன்ற கொன்றைப் பூங்கொத்தும், வெள்ளிமுளை அன்ன விரிநிலா கொழுந்தும் - வெள்ளியினாற்செய்த அங்குரத்தையொத்த விளங்குகின்ற இளஞ்சந்திரனும், காந்தள் மலர்ந்தன்ன பாந்தளின்நிரையும் - காந்தள் மலர்ந்தாற்போன்ற பாம்புகளின் கூட்டமும், திரைசுழித்து எறியும் பொருபுனல் கங்கையில் - அலைகள் சுருட்டி வீசும் மோதுகின்ற நீரையுடைய கங்காநதியில், வெள்இதழ்கமலம் வள்ளம்வாய்விரித்தென - வெண்மையாகிய இதழ்களையுடைய தாமரைமலர் கிண்ணம்போன்றவாயை மலர்த்தினாற்போல, முழுநகை முகிழ்க்கும் - மிக்க ஒளியைவீசுகின்ற, கழிமுடை வெண்டலை - மிகுந்தமுடைநாற்றத்தையுடைய வெண்மையாகிய (சிவபெருமானது) தலையை, தோல் அடி - தோலாகிய அடியையும், செங்கால் - சிவந்தகால்களையும், பால்புரை வரிசிறை - பாலையொத்த [வெளுத்த] இரேகைகளையுடைய சிறகுகளையும், கிஞ்சுகம் மலர்ந்த செம்சூடு - முருக்கமலர் மலர்ந்தாற்போன்ற சிவந்த உச்சிக்கொண்டையையுமுடைய, எகினத்து - அன்னத்தினுடைய, உரு எடுத்து - உருத்தரித்து, அகல்வான்துருவியும் - பரந்த ஆகாயமுழுவதிலுந்தேடியும், காணாது - காணாத, தொல்மறைகிழவ - பழைய வேதங்களுக்குரிய பிரமனே! இக்கடவுள் மாமுடிசென்னி - பெருமைபொருந்திய முடியையுடைய இந்தக் கடவுட்டன்மையையுடைய சிரத்தை, யானேகண்டுகொண்டனன் என - நானே பார்த்தேனென்று, பெருமகிழ்சிறப்ப-மிக்கஆநந்த முண்டாக,குரவை இட்டு ஆர்த்து-சத்தஞ்செய்து ஆரவாரித்து,வெள் எயிறுஇலங்க-வெள்ளியபற்கள் வெளியில் விளங்கும்படி,விரைவின் சிரித்தென-வேகமாய்ச்சிரித்தாற்போல,பெருவியப்பு இழைக்கும் - மிக்க ஆச்சரியத்தை யுண்டாக்குகின்ற,எரிபுரைசடையோய்-நெருப்பையொத்த (கபர்த்தமென்னுஞ்) சடையை யுடையவனே! ஆள்வழக்கு அறுக்கும்-ஆடவரினது வழங்குதலைப்போக்குகின்ற,வாள்அமர்தடகண்-வாளாயுதத்தையொத்தபெரிய கண்களையும்,மின்இழைமருங்குல்-மின்னலையும்நூலிழையையுமொத்த இடையையும், சில்மொழி-குளிர்ந்தபேச்சுக்களையுமுடைய, மகளிர்—மாதர்களுடைய,ஒழுகு ஒளிமிடற்றின்-மிகுந்து விளங்குகின்ற காந்தியையுடைய கழுத்தினுடைய, அழகுகவர்ந்து உண்டென - அழகைப் பறித்துக்கொண்டதென்று, கயிறுகொண்டு ஆர்க்கும் காட்சித்து என்ன - கயிற்றினாற்கட்டிய தோற்றத்தையுடையதுபோல (விளங்குகின்ற), மரகதம் காய்த்து - மரகதம்போன்ற பசியகாய்கள் காய்க்கப்பெற்று, பவளம் பழுக்கும் - பவளம்போற் சிவந்த பழங்கள் பழுக்கப்பெற்ற, கம குலைகமுகின் - நிறைந்த குலையுடைய பாக்குமரத்தினது, கழுத்து இற - கழுத்து ஒடியும்படி, யாத்து - கட்டப்பட்டு, வீசு ஒளி பசும்பொன் ஆடு ஊசல் அயல்வர - வீசுகின்ற காந்தியையுடைய பசிய பொன்னாற்செய்த அசை

கின்ற ஊஞ்சல் அருகிடத்திற் பொருந்துதலால், பருமணி பசு கமுகின் கழுத்து உடைந்து - பருத்த மாணிக்கம்போற் பசிய அப்பாக்கு மரத்தினது கழுத்து உடைதலால், நுரைபடு குருதிதிரள் தெறித்தென்ன - நுரைத்துவருகின்ற ரத்தத்தினது கூட்டஞ் சிதறினாற்போல, முழுகுலை முரிந்து - பெரிய தாறுகள் ஒடிதலால், பழுக்காய் சிதறும் - பழுத்தகாய்கள் சிந்துகின்ற,மங்குல் கண்படுக்கும் மதுமலர் பொதும்பர் - மேகங்கள் தங்குகின்ற தேன் பொருந்திய பூக்களுள்ள சோலையையுடைய, கங்கைசூழ்கிடந்த - கங்காநதியாற் சுற்றியிருக்கப்பெற்ற, காசிவாண - காசீநகரத்திலெழுந்தருளி யிருப்பவனே! ஐவளிபித்து எனும் அவை தலையெடுப்ப - சிலேட்டுமம் வாதம் பித்தம் என்பவைகள் மிகுந்திருக்க, ஐவரும் - பஞ்சபிராணன்களும், மெய்விட்டு - உடம்பைவிட்டு, கைவிடும் - நீங்குகின்ற, எல்லையின் - காலத்தில், மாமுதல்தடிந்த காமருகுழவியும் - மாமரத்தைவெட்டின அழகிய சுப்பிரமணியனும், பொழிமதம் களையும் மழ இளகளிறும் - பெருகுகின்ற மதம் வழிகின்ற மிகவும் இளமைபொருந்திய விநாயகனும், மூண்டு எழுமானம்பூண்டு - உண்டாகி வளர்கின்ற அபிமானத்தை மேற்கொண்டு, அழுக்கறுப்ப - பொறாமைப்படும்படி, இடக்கையின் அணைத்து - இடது கையினாற்றழுவி, நின்மடித்தலத்து இருத்தி - உனது மடியினிடத்தில் இருக்கச்செய்து, உலகம் ஓர்எழும் பலமுறைபயந்தும் - ஏழுலகங்களையும் பல தடவைபெற்றும், முதிரா இளமுலை - முதிர்ச்சிபெறாத இளைய தனங்களையும், முற்று இழை - நிறைந்த ஆபரணங்களையுமுடைய, மடந்தை - பார்வதியானவள், ஒள்தொடி தடகையின் வீசும் தோகைநுண்துகிலின் - விளங்குகின்ற வளையல்களையணிந்த பெரிய கையினால் வீசுகின்ற மயிலிறகுபோல நுட்பமாகிய வஸ்திரத்தினின்றும், பிறந்த - உண்டாகிய, நாகு இள தென்றல் - மிகவும் இளையதென்றற்காற்று, மோகமும் தளர்ச்சியும் தாகமும் தணிப்ப - மயக்கத்தையும் மெலிவையும் விடாயையும் போக்க,மறைமுதல்பொருளின் - வேதத்தினுடைய சிறந்த அர்த்தங்களாகிய, நிறைசுவை அமுதினை - நிறைந்த உருசியையுடைய அமிர்தத்தை, அம்செவி மடுத்துஉண - அழகிய காதுகள் நிறைய உண்ணும்படி, ஊட்டி - உண்பித்து, நின்குஞ்சித அடிக்கீழ் - உனது மடக்கிநிற்கின்ற திருவடிகளின் கீழே, குடி இருத்துக - (எந்நாளும்) வாழும்படிசெய்க, (எ-று.)

உருக்கு - முதனிலைதிரிந்ததொழிற்பெயர்; வழக்கென்பது மது; உருகு பொன் என்றுமாம். கொழுந்து - இளமை. காந்தள் - வடிவிற்கும் நிறத்திற்கு முவமம். ராஜஹம்ஸமென்பார், "தோலடிச்செங்காற் பால்புரை வரிச்சிறைக் கிஞ்சுகமலர்ந்த செஞ்சூட்டெகினம்" என்றார். கிஞ்சுகம் - கிம்சுகம்என்னும் வடமொழித்திரிபு; ஆகுபெயர். அலர்ந்த என்றும் பிரிக்கலாம். எகின் - அன்னம், மரமல்லெகின்மொழி ; அத்து - சாரியை. அடியே வேதங்களுக்கும் எட்டாததானால் முடி தனக்கு எட்டுமோ ? என்பதை ஆராயாது முயன்ற வேத ஜடனென்பார் 'தொன்மறைக்கிழவ' என்றார். கொண்டனன், அன் - ஒருமைத்தன்மை விகுதி. யானே, ஏ - பிரிநிலை ; அது பிரமனைப் பிரித்து நின்றது. இழை - ஆகுபெயராய்ச் சீலையென்றுமாம். சின்மொழி - சில மொழியுமாம். உண்டென - உண்டதென வென்பதன் விகாரம். மரகதம் - மரதக மென்பது எழுத்து நிலைமாறிற்று. மரகதம், பவளம் - உவம வாகுபெயர். கம - நிறைவாகிய குறிப்புணர்த்தும் உரிச்சொல்; " கமநிறைந் தியலும்." ஆட்டு - விளையாட்டென்றுமாம். பருமணிக் கமுகு - பருத்த முத்துக்களையுடைய கமுகென்றுமாம். பொதும்பர், அர் - ஈற்றுப்போலி. கங்கை-பூமியி விழிந்தது. பித்து - பித்தமென்பதன் விகாரம். ஐவர் - தொகைக்குறிப்பு. மாமுதறடிந்த காமரு

குழவியென்றது அசுரரெல்லாருந் தம்முடனெதிர்ந்தார் வலியிலேபாதி தங்கள் வலியிலே கூடும்படி மந்திரங்கொண்டிருந்து சாதித்தவொருமாவை வெட்டினனென்றவாறு. "கவிழிணர், மாமுத றடிந்த மறுவில் கொற்றத்து" என்றார் திருமுருகாற்றுப்படையிலும்; இம்மாவைச் சூரபன்மனென்பாருமுளர். குழவி - ஈண்டு இளம்பிள்ளை. மழவிள - ஒரு பொருட்பன் மொழி; நாகிள என்பதும் அது. அழுக்கறுத்தல் - பிறராக்கம் பொறாமை, எதிர்மறையிலக்கணை; ஒருசொல்லென்பாரு முளர். நாகிளந்தென்றல் - மந்த மாருதம். மறை முதற்பொருள் - வேதத்தின் முதலாகிய பிரணவத்தின் பொருளுமாம். ஊட்டி - பிறவினை வினையெச்சம்; உண்டு - தன்வினை. விரித்து, சிரித்து, தெறித்து, இவை ஆலீற்றெதிர்கால வினையெச்சத் திரிபுகள். மடுத்து - மடுப்ப வென்பதன் விகாரம். ஆள் வழக்கறுக்கும் வாளமர் தடங்கண் - "வாளரந்துடைத்தவைவேலிரண்டுடன்மலைந்தவேபோ, லாள்வழக்கொழியநீண்டவணிமலர்த்தடங்கண்" என்றார் சிந்தாமணியிலும். தடங்கண், கமஞ்சூல், தடக்கை, இவை - அகரவீற் றுரிச்சொல் மெல்லெழுத்து மிக்கும் வல்லெழுத்து மிக்கும் முடிந்தன. கமுகிலே முத்துப் பிறக்குமென்பது "தந்திவராகமருப்பிப்பிபூகந்தழைகதலி, நந்துசலஞ்சலமீன்றலைகொக்குநளினமின்னார், கந்தரஞ்சாலிகழைகன்னலாவின்பல்கட்செவிகா, ரிந்துவுடும்புகராமுத்தமீனுமிருபதுமே" என்பதனலறிக. வெண்டலை - வெள்ளியதலையையுடையவனே என்றுங் கூறலாம். (௩எ)

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

குடியிருக்கும்புன்குரம்பைகுலைந்திடுநாட்
 கொலைக்கூற்றங்குமைத்தசெம்பொ
னடியிருக்கும்பரந்தாமப்புக்கில்புகுந்
 தானந்தவமுதமாந்திக்
கடியிருக்குநறைக்குழன்முத்தித்திருவை
 முயங்கிடவுங்கடவேன்கொல்லோ
துடியிருக்குமிடையவளோடவிமுத்தத்
 திருந்தபரஞ்சோதியானே.

(இ-ள்.) துடி இருக்கும் இடையவளோடு - உடுக்கையின் தன்மைபொருந்திய இடையையுடைய பார்வதியோடு, அவிமுத்தத்து-காசிநகரத்தில், இருந்த- எழுந்தருளியிருந்த, பரஞ்சோதியானே - சுயம் பிரகாசத்தையுடைய கடவுளே! குடியிருக்கும் - குடிகொண்டுவசிக்கின்ற, புன்குரம்பை - அற்பமான உடலாகிய சிறுகுடில், குலைந்திடுநாள் - அழியுங்காலத்தில், கொலைகூற்றம் - கொல்லுதற்றொழிலையுடைய யமனை, குமைத்த - தோற்பித்த, செம்பொன் அடி - சிவந்த பொன்போற் கிடைத்தற்கரிய திருவடிகள், இருக்கும் - வீற்றிருக்கின்ற, பரந்தாமம்புக்கில் - முத்தியுலகமாகிய பெருவீட்டை, புகுந்து- அடைந்து, ஆனந்தம் அமுதம்-பேரின்பமாகிய அமிர்தத்தை, மாந்தி-குடித்து, கடிஇருக்கும் நறைகுழல் முத்திதிருவை - வாசனைவீசுகின்ற தேனையுடைய கூந்தலையுடைய மோக்ஷலக்ஷ்மியை, முயங்கிடவும் கடவேன்கொல்ஓ - ஆலிங்கநஞ்செய்யவுந் தகுவேனோ? (எ-று.)

குரம்பை - உடல் சிறுவீடு முதலிய பலபொருள்கொண்ட ஒருசொல். குரம்பையாகிய குரம்பையென உருவகப்படுத்துக. பொன் - ஆகுபெயராய்ப்

பொற்கழலுமாம். புக்கில் - புகு + இல். முத்தி-முக்தி. முயங்கிடவும், உம்மை-தனது இழிவை விளக்கிற்று. துடி - துடியின் றன்மை, அதாவது இருபுறமும் பருத்து நடுவில் நுண்ணிதா யிருத்தல்; ஆகுபெயர். ஏகாரம்-விளியுருபு. (௩௮)

[களி. சந்தத்தாழிசை.]

சோதியொன்றிலொருபாதிசத்தியொருபாதியும்பரமசிவமெனத்
தொகுத்துவைத்தவிமுத்தநாயகர்துணைப்பதம்பரவுகளியரோம்
ஓதியோதியிளைப்பர்வேதமுணர்த்துதத்துவமுணர்கிலார்
உணரும்வண்ணமனுபவத்தில்வந்திடுமொருண்மைவாசகமுணர்த்து
ஏதினாலறமனைத்தினும்பசுவினைப்படுத்தனல்வளர்த்திடும் [கேம்
யாகமேயதிகமென்பதன்பர்தமிறைச்சிமிச்சிலிச்சையார்
ஆதியாரறிவரதுகிடக்கவதுவருந்திலப்பொழுதிலேபெறற்
கரியதோர்பரமசுகம்விளைந்திடுவததுமறுத்தவிரவில்லையே.

(இ-ள்.) சோதி ஒன்றில் - சுயம்பிரகாசரூபமாகிய ஒரு திரு வுருவத்தில், ஒருபாதி சத்தியும் - ஒருபாதி யுருவம் பார்வதியும், ஒருபாதி பரமசிவமும் - மற்றொருபாதி யுருவம் பரமசிவனும், என - என்னும்படி, தொகுத்து வைத்த- இரண்டுருவமுஞ்சேர்ந்த, அவிமுத்தநாயகர் - காசிக்குத்தலைவராயவரது, துணைபதம் - இரண்டு திருவடிகளை, பரவுகளியரேம் - புகழ்கின்ற களியர்கள் (யாம்); ஓதி ஓதி இளைப்பர் - உச்சரித்து உச்சரித்து மெலிபவரா யிருந்தும், வேதம் உணர்த்து தத்துவம் உணர்கிலார்-வேதங்களறிவிக்கின்ற உண்மைப் பொருளை யறியாதவர்கள், உணரும் வண்ணம் - அறியும்படி, அனுபவத்தில் வந்திடும் ஓர் உண்மைவாசகம் - அனுபோகத்தில் வருகின்ற ஒரு தத்துவமா கிய வார்த்தையை, உணர்த்துகேம் - சொல்லுவோம்; அறம் அனைத்தினும் - எல்லாத்தருமங்களிலும், பசுவினைபடுத்து - நாற்காற் சந்துவைக்கொன்று, அனல்வளர்த்திடும் - நெருப்பில் ஹோமஞ்செய்கின்ற, யாகமே - வேள்வியே, அதிகம் என்பது - சிறந்ததென்றுசொல்வது, எதனால் - எதனாலே? அது-அவ் வேள்வியில் அக்கியில் ஹோமஞ்செய்வது, அன்பர்தம் இறைச்சிமிச்சில் - பக்தர்களுடைய மாம்ஸத்தினுடைய மிகுதி; இச்சை ஆர் ஆதியார் - பக்திபொருந்தியபெரியோர்கள், அறிவர் - அதனையறிவர்; அதுகிடக்க - அதுநிற்க, அது வருந்தில் - அப்பசு வருத்தப்பட்டால், அப்பொழுதே பெறற்கு அரியது ஓர் பரமசுகம் விளைந்திடுவது - அப்பொழுதே யாவராலும் பெறுவதற்கரியதான ஒரு பேரின்பம் உண்டாவது (என்பது சிலர் கொள்கை); அதுமறுதவிர இல்லையே - அதுபழிதவிர வேறொன்றுமில்லை, (எ-று.)

சோதி - ஆகுபெயர். சத்தி - சக்தி. தொகுத்து வைத்த - ஈண்டுத்தன் வினை. களியர் என்பதற்குக் களிப்புடைய அடியவரென்றும், கட்குடியரென்றும் பொருள்கொள்க. ஓதி யோதி - வினைவால் இரண்டடுக்கிற்று; மிகுதி யாலுமாம். ஆடு, குதிரை முதலியவுமடங்கப் பசுவென்பதற்கு நாற்காற்சந்துவென்றுரைக்கப்பட்டது. தத்துவம் - தத்வம்; வகரத்திற்கு உகாரம் வந்தது. எல்லா உயிர்களும் பரமசிவனுக்கு அடிமையாதலால், பசுவினிறைச்சியை அன்பர்த மிறைச்சியென்றார். மறுவெனவே பாவமுமடங்கிற்று. ஆதியார் - முன்னோர். அறம் - (வேதங்களால்வரை) யறுக்கப்படுவது. (௩௯)

[கட்டளைக்கலித்துறை.]

இல்வாழ்வைவிட்டுக்கதிவேட்டடைபவர்க்கேழைபங்க
னல்வாழ்வையேதருங்காசிப்பிரானறும்பூங்கடுக்கை
வல்வார்முலைக்கொம்பனாய்தந்தைதாண்மழுவாலெறிந்து
கொல்வாரொருவருக்கல்லாதெவர்க்குங்கொளற்கரிதே.

(இ-ள்.) வார் - கச்சினாலிறுக்கிக்கட்டிய, வல்முலை - வலியதனங்களை யுடைய, கொம்பு அனாய்-பூங்கொம்பை யொத்தவளே! இல்வாழ்வை - மனையிலிருந்து மனைவியோடு செய்யும் இல்லறத்தை, விட்டு - துறந்து, கதிவேட்டு - நற்கதியை விரும்பி, அடைபவர்க்கு - (தன்னைச்சரணமாக) அடைபவர்களுக்கு, நல்வாழ்வை ஏ தரும் - (அவர்விரும்பின) நற்கதியையே கொடுக்கின்ற, ஏழைபங்கன் - பார்வதியை ஒருபாகத்தி லுடையவனும், காசிப்பிரான் - காசிக்குத்தலைவனும், நறு பூங்கடுக்கை - மணக்கின்ற கொன்றைமலரையுடைய, தந்தை - எல்லா உயிர்களுக்குந் தாதையுமாகுமவரது, தாள் - திருவடிகள், மழுவால் எறிந்து - பரசாயுதத்தினால் துணித்து, கொல்வார் ஒருவருக்கு அல்லாது - (க்ஷத்திரியர்களைக்) கொல்பவராகிய ஒருபரசுராமனுக்கல்லாமல், எவர்க்கும் - மற்றையாவருக்கும், கொளற்கு அரிது - அடைவதற்கு அரியது, (எ-று.)

வேட்டு, வேள் - பகுதி. சுப்பிரமணியனோடு விற்கல்வி பயின்ற மாணாக்கராதலின், பரசுராமனைக் கூறினார். விஷ்ணுவுக்கல்லாமல் மற்றையார்க்கு அரிதென்பது கருத்து. பரசுராமன் - விட்டுணுவின் ஆறும் அவதாரம். வல்வார்முலைக்கொம்பனாய் - மகடூஉ முன்னிலை. (௬0)

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

கொள்ளையிடச்சிலர்க்குமுத்திச்சரக்கறையைத்திறந்துகொடுத்தனந்தகோடிப், பிள்ளைகள்பெற்றுடையபெருமனைக்கிழத்திக்கேகுடும்பம்பேணுகென்னு, வுள்ளபடியிருநாழிகொடுத்ததி லெண்ணான்கறமுமோம்புகென்று, மள்ளல்வளவயற்காசியாண்டகையார் பெருந்தகைமையழகிதாமே.

(இ-ள்.) கொள்ளையிட - கொள்ளைகொண்டு உண்ணும்படி, சிலர்க்கு - சிலபேருக்கு, முத்தி அறையை - மோக்ஷமாகிய வீட்டை, திறந்து—, சரக்கு - பேரின்பமாகிய வியாபாரப்பொருள்களை, கொடுத்து —, அனந்தகோடி பிள்ளைகள் - அளவில்லாத [பல] பிள்ளைகளை,பெற்று உடைய - பெற்று அக்குழந்தைகளை உடைத்தாயிருக்கின்ற, பெருமனைக்கிழத்திக்கு ஏ - பெரிய குடும்பியாகிய பெண்டாட்டிக்கு, குடும்பம் பேணுக என்னா - (உன்னுடைய) ஸம்ஸாரத்தைக்காப்பாற்றுவாயாகவென்று சொல்லி, உள்ளபடி - உண்மையாக, இருநாழிகொடுத்து - இரண்டுநாழி அரிசியைத்தந்து, அதில் - அதனில், எண்நான்கு அறமும் - முப்பத்திரண்டு தருமங்களையும், ஓம்புக என்றார் - செய்கவென்றுசொல்லினார் ; அள்ளல் வளவயல்காசி - குழம்புச் சேற்றையுடைய பல வளப்பங்களை யுடைய காசிநகரத்திலெழுந்தருளியிருக்கின்ற, ஆண் தகையார் - ஆண்டன்மையையுடைய சிவபெருமானது, பெருந்தகைமை - பெருந்தன்மை, அழகிது ஆம் ஏ - அழகினையுடையதாகுமோ ? (எ-று.)

கோடி - நூறுலட்சம். லோகமாதாவாதலால் அனந்தகோடிப்பிள்ளைகள் பெற்றுடைய பெருமனைக்கிழத்தி யென்றார். நாழி - காற்படி, அது இங்கு முகத்தலளவை யாகுபெயர். இருநாழி - அரை; உள்ளபடி தன்சரீரத்தில் ஒரு அரைப்பாகங் கொடுத்தென்ற உள்ளுறைப் பொருளுங்கொள்க. ஆண்டகையார் என்பதனை மத்திமதீபமாக்கி, ஆண்டகையார் என்றார், அவர் பெருமையழகிதாமே, எனக்கூட்டிமுடிக்க. அயலார்க்கு எல்லாவற்றையுங் கொடுத்துத் தன் குடும்பத்திற்கொன்றுங்கொடாத வீண்டம்பனென்பார், ஆண்டகையாரென்றார்; அன்றி இகழ்ச்சியுமாம். அழகிது - குறிப்புமுற்று; இனி இது அழகாமே என்றும் பிரித்துமுடிக்கலாம். (௪௧)

[குறம், அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

**அழகுதுயில்குங்குமக்கொங்கையணங்கேயெங்களருட்காசிக்**
**குழகர்மகற்குமகட்கொடுத்தகுடியிற்பிறந்தகுறமகள்யான்**
**ஒழுகுதொடிக்கைக்குறியுமுகக்குறியுந்தருமொள்வளைக்குறியும்**
**புழுகுமுழுகுமுலைக்குறியுமுடையாரவர்பொற்புயந்தானே.**

(இ-ள்.) அழகுதுயில் குங்குமம் கொங்கை அணங்கே - அழகு தங்குகின்ற குங்குமமணிந்த தனங்களையுடைய பெண்ணே! எங்கள் அருள்காசி குழகர்மகற்கு - எங்களுடைய காசியிலெழுந்தருளியிருக்கின்ற கருணையையுடைய சிவபெருமானது பிள்ளைக்கு [சுப்பிரமணியனுக்கு], மகள் கொடுத்த - (வள்ளியம்மை யென்னும்) பெண்ணைக்கொடுத்த, குடியில் - சாதியில், பிறந்த—, குறமகள்யான் - குறத்திநான்; ஒழுகு தொடி கை குறியும் - கழன்று விழுகின்றவளையல்களையுடைய கையினது சகுனக்குறிப்பும், முகக்குறியும் - வதனத்தினது குறிப்பும், ஒள்வளை தரும் குறியும் - ஒள்ளியவளையல் காட்டுங் குறிப்பும், புழுகு முழுகும் முலைக்குறியும் - கஸ்தூரிவாசனையிலமுந்திய தனங்களின் குறிப்பும் [இவை குறிப்பாய்கூறுவது], உடையார் அவர் பொன்புயம் - எல்லாமுடையவராகிய அக்காசிநாதரது அழகிய தோள்களையே, (எ-று.)

அணங்கு - தெய்வப்பெண்; உவமவாகுபெயர். அழிவுமூப்புகளின்மையாலும், விருப்பத்தினாலும், குழகரென்றாள்; குழகர் - இளமையையுடையவர். தன் சாதியைச்சிறப்பிக்க, எங்களருட்காசிக் குழகர்மகற்கு மகட்கொடுத்த குடியென்றாள். குடி - குலமுமாம். காமமிகுதியால் வளைகழலுதலால், ஒழுகு தொடிக்கையென்றாள். தருமென்பதனை மற்றையவற்றோடுங் கூட்டலாம். இது குறம்; அஃதாவது குறிகூறுதல். பெண்ணே! நினது அங்கங்களின் குறியை நோக்குமிடத்து அது மிகவும் நன்றாயிருந்தது; ஆதலின், நின்னால் அடையப்படுவது காசிநாதரின் பொற்றோளே, பிறவன்றெனக் குறத்தி குறிகூறினாளென்க. (௪௨)

[கட்டளைக்கலித்துறை.]

**புயல்வண்ணக்கண்ணற்கொளித்தவக்கள்வன்புணர்ப்பையெண்ணாள்**
**கயல்வண்ணக்கண்ணிதன்கண்ணினுட்புக்கதுகண்டிருந்துஞ்**
**செயல்வண்ணங்கண்டிலள்வாளாப்புறத்தெங்குந்தேடுகின்றாள்**
**வயல்வண்ணப்பண்ணையவிமுத்தத்தானைமனத்துள்வைத்தே.**

(இ-ள்.) கயல்வண்ணம்கண்ணி - கெண்டைமீன்போன்ற வடிவத்தையுடைய கண்களையுடைய இப்பெண், வயல்வண்ணம்பண்ணை அவிமுத்தத் தானை - கழனிகளையும் அழகிய நீர்நிலைகளையுமுடைய காசியிலெழுந்தருளி

யிருப்பவனை, மனத்துள்வைத்து - நெஞ்சில்நினைத்துக்கொண்டு, புயல்வண் ணம்கண்ணற்கு ஒளித்த அக்கள்வன் - மேகநிறத்தையுடைய திருமாலுக்குத் தனது திருவடிகளை மறைத்த அவ்வஞ்சகனுடைய, புணர்ப்பை - தந்திரத்தை, எண்ணாள் - அறியாதவளாய், தன் கண்ணினுள் புக்கதுகண்டு இருந்தும் - (அவன்) தனது நேத்திரத்தினுள்புகுந்ததை அறிந்திருந்தும், செயல்வண்ணம் கண்டிலள் - செய்யவேண்டியகாரியத்தின்விதத்தை யறியாதவளாய், வாளா - வீணாக, புறத்து எங்கும் - வெளியிலெல்லாவிடங்களிலும், தேடுகின்றாள் —,

கண்ணனென்பது - [க்ருஷ்ணன்] கரியோனென்னும் பொருளதோர் பாகதச்சிதைவு; அது அப்பண்புகுறியாது ஈண்டுப்பெயராய் நின்றமையின், புயல்வண்ணக்கண்ணனென்றார், சேற்றிற்பங்கயமென்றாற்போல; இதனை "கருங்கண்ணனையறியாமை நின்றோன்" என்றுந் திருக்கோவையாரானு முணர்க. மாயவனுக்கு மொளித்த மாயவனென்பாள் கண்ணற்கொளித்தவக் கள்வனென்றாள். (சங)

[மறம். அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

வையமுழுதொருங்கீன்றவிடப்பாகராநந்தவனத்தில்வாழும், வெய் யதறுகண்மறவர்குலக்கொடியைவேட்டரசன்விடுத்ததூதா, கையில வன்றிருமுகமோகாட்டிருகண்டொட்டுமுட்டைகதையிற்றாக்கிச்,செய் யகொடிறுடைத்தகல்வாய்கிழித்தரிவோநாசியொடுசெவியுந்தாமே.

(இ-ள்.) வையம் முழுது ஒருங்கு ஈன்ற - உலகமுழுவதையும் ஒரு தட வையிலே பெற்ற, இடப்பாகர் - இடது பாதியையுடைய சிவபெருமானது, ஆநந்தவனத்தில் - ஆனந்தமென்னும்வனத்தில், வாழும்-வாழ்கின்ற, வெய்யத றுகண்மறவர் - உக்கிரமான அஞ்சாமையையுடைய வேடர்களுடைய, குலம் கொடியை - குலத்திற் பிறந்த பெண்ணை, வேட்டு - விரும்பி, அரசன் விடுத்த- அரசனால் விடப்பட்ட, தூதா - தூதனே! கையில் அவன் திருமுகம் ஓகாட்டு- (உன்) கையில் உள்ள அவனது திருமுகத்தைக் காண்பி; இருகண்தொட்டு - இரண்டு கண்களையுந் தோண்டி, முட்டைகதையில் தாக்கி - முள்ளைத் தைத் திருக்கின்ற கதாயுதத்தினால் அடித்து, செய்யகொடிறு உடைத்து - நல்ல கன் னத்தைப் பிளந்து, அகல்வாய் கிழித்து - அகன்றவாயைக்கிழித்து, நாசி யொடுசெவியும் அரிவோம் - மூக்கையுங் காதையுமறுப்போம், (எ-று.)

பார்வதியை யுடைத்தாயிருத்தலால், வையமுழுதொருங் கீன்றவிடப் பாகரென்றார். குலக்கொடி - சிறந்தபெண்ணென்றுமாம். கொடி-ஆகுபெயர். வேட்டுவிடுத்தவென இயையும். திருமுகம் - ஓலையைக் குறிக்கும்போது குழூஉக்குறியாகிய தகுதிவழக்கு. ஓலையைத் தொட்டுத் தாக்கி யுடைத்துக் கிழித்து அரிவோமென்க. (சச)

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

தாக்குபடைவேள்கணைமழைக்குத்தரியாதிருகண்மழையருவி
தேக்குமிவட்காநந்தவனத்திருந்தாருள்ளந்திருந்தார்கொல்
காக்கவரியவிளவாடைக்காற்றுக்குடைந்துகாந்துவச்சை
மாக்களெனவேமுடவலவன்வளைவாயடைக்குமழைநாளே.

(இ-ள்.) காக்க அரிய இளவாடை காற்றுக்கு - தடுத்தற்கு முடியாத இளையவடகாற்றுக்கு, உடைந்து - ஆற்றாதனவாய், கரந்து - மறைந்து, வச் சைமாக்கள் எனவே - லோபிகள்போல, முட அலவன் - வளைவையுடைய

நண்டுகள், வளைவாய் அடைக்கும் - தமது நுழைவளையின் வாயிலே மூடுகின்ற, மழைநாள் - மழைகாலத்தில், தாக்கு படைவேள் கணை மழைக்கு - மோதுகின்ற ஆயுதத்தையுடைய மன்மதனது பாணவர்ஷத்திற்கு, ஆரியாது - ஆற்றாமல், இருகண்மழை அருவி - தனது இரண்டுகண்களினின்றும் பெருகுகின்ற கண்ணீராகிய மழையருவியை, தேக்கும் இவட்கு - நிறைக்கின்ற இப்பெண் விஷயத்தில், ஆனந்தவனத்துஇருந்தார் - ஆநந்தவனத்திலிருக்குஞ் சிவபெருமான், உள்ளம் திருந்தார்கொல் - மனமிரங்காரோ? (எ-று.)

கண்ணுங் காரும் மழைபொழிந்தன. காலம் காராயிற்று. இருகண்ணுமென்னும் உம்மை விகாரத்தாற் றொக்கது, யாக்கை, இளமை, செல்வ முதலியவற்றின் நிலையாமையையறிந்து தானஞ்செய்யாமையால் ஐயறிவிற்குரிய மாக்களென்னும் பெயராற் கூறினர். வச்சைமாக்கள் இரப்போர் வரும்போது தம் வீட்டுவாயிற் கதவை மூடுதலால், ஈண்டு அலவனுக்கு உவமையாயினர். அலவன் - சாதியொருமை. (௪௫)

[கட்டளைக்கலித்துறை.]

மழைவளைக்கும்பொழிற்காசிப்பிரான்வெற்பில்வண்டறைபூந்
தழைவளைக்கைக்கொடுத்தேன்கண்ணிலொற்றித்தளரிடைநன்
இழைவளைக்குங்கொங்கையூடணைத்தாளித்தழையினுள்ளே
கழைவளைக்குஞ்சிலைவேளனையாயிதைக்கண்டுகொள்ளே.

(இ-ள்.) மழைவளைக்கும் பொழில் காசிபிரான் - மேகங்கள் சூழ்ந்து தங்குகின்ற சோலைகளையுடைய காசி நாதனது, வெற்பில் - மலையிலுள்ள, வண்டு அறைபூதழை - வண்டுகள் மொய்த்தொலிக்கின்ற மலர்களையுடைய இலைத்தழையை, வளைகைகொடுத்தேன் - (இப்பெண்ணினது) வளையல்களையணிந்த கையில் தந்தேன்; தளர் இடை - மெல்லிய இடையையுடைய இப்பெண், (அதனை) கண்ணில் ஒற்றி - (தனது) கண்களில் ஒற்றிக்கொண்டு, நன் இழை வளைக்கும் கொங்கையூடு - (தனது) ஆபரணங்கள் பொருந்திய தனங்களிலே, அணைத்தாள் - சேர்த்தினாள்; இத்தழையினுள்ளே - இந்தத்தழையிலே, கழைவளைக்கும் சிலைவேள் அனையாய் - கரும்பாகிய வளைந்த வில்லையுடைய மன்மதனையொத்தவனே! இதை கண்டுகொள் - இதனைப் பார்த்துக்கொள் [அறிந்துகொளென்றபடி], (எ-று.)

தளரிடை - அன்மொழித்தொகை. வளைக்குஞ்சிலை - காமுகரையாற்றாமையாற் றோற்கச்செய்கின்ற சிலையென்றுமாம். (௪௬)

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

கண்ணிருக்குந் திருநுதலுங்கனலிருக்குந் திருக்கரமுங் கலந்தோர்
பேதைப்,பெண்ணிருக்குமிடப்பாலும்பிறையிருக்குமவுலியுமாய்ப்பிரிக்
கலாகா, எண்ணிருக்குங்கணத்தொடுமாநந்தவனத்திருப்பானையெங்கே
காண்பார், பண்ணிருக்குமறைகளுமெண்கண்ணனுங்கண்ணனுமமரர்
பலருந்தாமே.

(இ-ள்.) கண் இருக்கும் திருநுதலும் - கண் இருக்கப்பெற்ற அழகிய நெற்றியும், கனல் இருக்கும் திருகரமும் - மழுப்படை இருக்கப்பெற்ற அழகியகையும், கலந்து - பொருந்தப்பெற்று, ஓர் பேதைபெண் இருக்கும் இடப்பாலும் - ஒரு இளமையையுடைய பெண்ணாகிய பார்வதி இருக்கப்

பெற்ற இடதுபாகமும், பிறை இருக்கும் மவுலியும் ஆய் - மூன்றும் பிறைச் சந்திரன் இருக்கப்பெற்ற சிரசுமாகி, பிரிக்கல் ஆகா - பிரிக்கமுடியாத, எண் இருக்கும் கணத்தொடும் - பலவாயிருக்கின்ற பிரமதகணத்தோடும், ஆநந்த வனத்து இருப்பானை - ஆநந்தமென்னும் வனத்தில் எழுந்தருளியிருப்பவனை, பண் இருக்கும் மறைகளும் - இசைபொருந்திய சாமமுதலிய வேதங்களும், எண் கண்ணனும் - பிரமனும், கண்ணனும் - விஷ்ணுவும், அமரர்பலரும் - மற்றைத் தேவர் பலரும், எங்கேகாண்பார்—? [காணாரென்றபடி], (எ-று.) ()

[கட்டளைக்கலித்துறை.]

**பல்லாண்டுதம்மைப்படைத்தவத்தேவனைப்பாரப்பைம்பொன்**
**வில்லாண்டதோள்கொட்டியெந்தையர்கோலவிடம்பழுத்த**
**அல்லாண்டகண்டத்தெம்மாதிப்பிரானவிமுத்தத்திலே**
**சில்லாண்டிருந்துசிவமாய்ச்செலுஞ்சிறுசெந்துக்களே.**

(இ-ள்.) பல்லாண்டு தம்மைபடைத்த அத்தேவர் - தம்மைக்குறித்துப் பல்லாண்டு பாடப்பெற்ற அப் பிரமன்முதலிய தேவர்கள், பாரம்பைம் பொன் வில் ஆண்டதோள்கொட்டி - கனமாகிய பசிய பொன்மலையாகிய வில்லைத்தாங்கிய புசத்தைத் தட்டுபவரும், எந்தையர் - எமது தந்தைபோல்பவரும், கோலவிடம் பழுத்த அல் ஆண்டகண்டத்து எம் ஆதிபிரான் - அழகிய விஷம்பொருந்திய காளகண்டத்தையுடைய எமது தலைவருமாகிய சிவபெருமானது, அவிமுத்தத்திலே - காசியில், சில ஆண்டு இருந்து - சில வருஷங்கள் தங்கியிருந்து, (பின்பு), சிவம் ஆய்செலும் - சிவரூபத்தை (ச்சாரூப்பியத்தால்) அடைந்து (நற்கதியிற்) போகின்ற, சிறு செந்துக்கள் ஏ-அற்பமாகிய சீவப்பிராணிகளே, (எ-று.)

பல்லாண்டு - வாழ்த்து. தேவனை, ஐ-அசை. செந்துக்களோடொப்பாவர்; உயர்ந்தவரல்லரென்பார், செந்துக்களேயென உபசரித்தார். இனி, சிறு செந்துக்கள், பல்லாண்டு தம்மைப்படைத்த அத்தேவனைக்குறித்துத் தன் பெருமைவிளங்கப் பாரப்பைம்பொன் வில்லாண்டதோள் கொட்டிக்கோலவிடம்பழுத்த அல்லாண்ட கண்டத்தெம் மாதிப்பிரான், எந்தையரது அவிமுத்தத்தில் சில்லாண்டிருந்து சிவமாய்ச்செலும் எனக்கூட்டிக் காசிமுத்தி தரு நகரமேழனு ளொன்றென்பதைச் சிறப்பித்ததாகவுரைத்தல் நேர். முன், கொட்டி - பெயர்; இப்பொழுது, கொட்டி - வினையெச்சம். இருபொருளிலும் பொன்-ஆகுபெயர். (௩௮)

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

**செந்தேனொழுகும்பொழிற்காசிச்சிறுநுண்ணுசுப்பிற்பெருந்தடங்கண்**
**பைந்தேனொழுகுமிடப்பாகர்படைவீடென்பதுணராய்கொல்**
**வெந்தேன்வளைந்தாயெமைப்பாவிமதனுவினையேவிளைந்தபோர்**
**உய்ந்தேகுவதிங்கரிதனற்கணுடையார்மழுவாட்படையாரே.**

(இ-ள்.) செந்தேன் ஒழுகும் பொழில் காசி - சிவந்த தேன்பெருகுகின்ற சோலையையுடைய காசிநகரம், சிறு நுண்ணுசுப்பின் - மிகவும் சிறிய இடையையும், பெருதடகண் - மிகவும் பெரிய கண்களையுமுடைய, பைந்தேன் - பசிய மதுப்போலினிய பார்வதிதேவி, ஒழுகும் - பொருந்திய, இடப்பாகர் - இடது பக்கத்தையுடைய சிவபெருமானது, படை வீடென்பது - ஆயுதசாலையென்பதனை, உணராய்கொல் - அறியாயோ? பாவிமதனு - பாவத்தொழி

லைச் செய்பவனுகிய மன்மதனே! வந்தேன் - (இக்காசியிற்) போந்தேன்; எமை வளைத்தாய் - எம்மை (ப்போரிற்காகச்) சூழ்ந்துகொண்டாய்; வினையே விளைந்த - அத் தீவினைப்பயன் கிட்டியது; (எவ்வாறெனில்) போர் உய்ந்து ஏகுவது இங்கு அரிது - யுத்தத்தில் உயிர் தப்பிப்போவது இவ்விடத்திலில்லை; (ஏனென்றால், இச்சிவபெருமான்) அனல்கண் உடையார் - அக்கினேத்திரத்தையுடையவர்; மழுவாள்படையார் - மழுவென்னும் ஒளிபொருந்திய ஆயுதத்தையுடையவர், (எ-று.)

சிறுநுண், பெருந்தட, என்பன - ஒருபொருட்பன்மொழி. பைந்தேன், பசுமை - புதுமை யுணர்த்திநின்றது. பைந்தேன் - ஆகுபெயர். உணர்ந்தாயாயின் இவ்வாறு தைரியமாய் வளையாயென்பதாம். கொல்-அசை. அக்கடவுளி னநுக்கிரகம்பெற்ற என்னையெனச் சிறப்பிப்பாள், எம்மையெனப் பன்மையாற் கூறினுள். விளைந்த - விளைந்தது என்பதன் விகாரம்; இனிப் பெயரெச்சமாக்கித் தொழிலோடுண்டாகிய போரென்றுமாம். (௩௯)

[மதங்கி, அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

**படலைநறுங்கடுக்கைமுடிப்பரஞ்சுடராரிசைபாடிப்பசுந்தேன்பில்கி, மடலவிழ்பூம்பொழிற்காசிமணிமறுகில்விளையாடுமதங்கியாரே, உடலு மெமக்குயிருமொன்றேயோடரிக்கண்வாளிரண்டு மொழியவென்னே, தொடலைவளைத்தடக்கையின் வாளிரண்டெடுத்துவீசிடநீர்தொடங்குமாறே.**

(இ-ள்.) நறு கடுக்கை படலை முடிபரம் சுடரார் - மணக்கின்ற கொன்றைமலர் மாலையையணிந்த திருமுடியையுடைய பரஞ்சோதியுருவமாயிருக்கின்ற சிவபெருமான் விஷயமாகிய, இசை - இராகத்தை, பாடி—, பசுந்தேன்பில்கி மடல் அவிழ் பூபொழில் - புதியதேனைத் துளித்துப் பூவிதழ்கள் விரியப்பெற்ற பொலிவையுடைய சோலையையுடைய, காசி - காசியின், மணிமறுகில் - அழகிய வீதிகளில், விளையாடும் - பொழுதுபோக்குகின்ற, மதங்கியாரே - பெண்களே! எமக்கு உடலும் உயிரும் ஒன்றே - எமக்குச் சரீரமும் ஆத்துமாவும் ஒன்றுதான் (பலவல்ல), நீர்—, ஓடு அரிகண் வாள் இரண்டும் ஒழிய - (காதளவும்) ஓடுகின்றரேகையையுடைய கண்களாகிய வாள்கள் இரண்டுந் தவிர, தொடலை வளைதடக்கையின் - பொருந்துதலையுடைய வளையல்களையணிந்த பெரிய கையினுலே, வாள் இரண்டு எடுத்து - வாள்களைத்தூக்கி, வீசிட - எறிய, தொடங்கும் ஆறு - முயலும்விதம், என்னே - என்ன? (எ-று.)

பரஞ்சுடரினது பொருந்திய இசையென்றும், பரஞ்சுடரார் காசியென்றுமாம். பூம்பொழில் - பூஞ்சோலையுமாம். பூமடலெனினுமமையும். மதங்கி - பாடுவிச்சி. (௪0)

[கலித்தாழிசை.]

**தொடங்காமேபணிமலருந்தூவாமேநல்குங்**
**கடங்கால்களிற்றுரியார்காசிவளம்பாடி**
**விடங்கான்றகன்றுகுழைமேற்போய்க்குடங்கைக்**
**கடங்காதவுண்கணீராடுகபொன்னூசல்**
**அம்பொன்மலர்க்கொம்பன்னீராடுகபொன்னூசல்.**

(இ-ள்.) தொடங்காமே - முயலாமல், பனி மலரும் - பனிபோற் றோன்றுகின்ற, தூவாமே நல்கும் - துளித்துளியாகச் சிந்தாமற் பெய்கின்ற, கடம் - மத ஜலத்தை, கால் - வெளிப்படுத்துகின்ற; களிறு உரியார் - யானைத்தோலை ஆடையாக உடையவரது, காசி - காசியினது, வளம் - வளப்பத்தை, பாடி—, விடம் கான்று - விஷத்தை உமிழ்ந்து, அகன்று - பரந்து, குழைமேல் போய் - காதணி யளவும் நீண்டு சென்று, குடங்கைக்கு அடங்காத - உள்ளங்கைகளுக்குள் அடங்காத, உண்கண்ணீர் - மையுண்ட கண்களையுடைய நீங்கள், பொன் ஊசல் ஆடுக - அழகிய ஊஞ்சலில் விளையாடுக; அம்பொன் மலர் கொம்பு அன்னீர் - அழகிய பூக்களையுடைய பொன் மயமான கொம்பை யொத்த நீங்கள், பொன் ஊசல் ஆடுக - அழகிய ஊஞ்சலில் விளையாடுக, (எ-று.)

கடங்கால் களிறு - மதயானை. ஆடவர்க்குக் காம வேதனையை யுண்டாக்குதலால் விடங்கான்றென்றும், காதளவு நீண்டதென்பார் குழைமேற்போயென்றுங், கூறினர். உண்கணீர், கொம்பன்னீர், என்பவற்றை விளியாக்கி, நீர் எனத் தோன்றா எழுவாயை வருவித்தலுமாம். பொன் ஊசல் - பொன்னாற் செய்த ஊசலுமாம். அம்பொன் - பொன் அழகாகி ஒருபொருட் பன்மொழியுமாம். (ருக)

[நேரிசைவெண்பா.]

பொன்னந்தாதென்னமலர்ப்பூந்துறையிற்புண்டரிகத்
தன்னந்தா நாடுமவி முத்தர்—இன்னமிர்தா
முன்னங்கடுங்கைமுகந்துண்டார்நல்காரே
இன்னங்கடுக்கையிவட்கு.

(இ-ள்.) பூதுறையில் - அழகிய நீர்த்துறையில், புண்டரிகத்து மலர் - வெண்டாமரைப் பூவில், பொன் தாது என்ன - பொன்துகள்போல (விளங்குகின்ற), தாது - மகரந்தங்களில், அன்னம் ஆடும் - அன்னப் பறவைகள் விளையாடுகின்ற, அவிமுத்தர் - காசியிலெழுந்தருளியிருப்பவரும், முன்னம் - பாற்கடல் கடைந்த காலத்தில், இன் அமிர்து ஆம் - இனிய தேவாமிர்தத்தை யொத்த, கடு - விஷத்தை, கை முகந்து - கையினால் மொண்டு, உண்டார் - குடித்தவருமாகிய சிவ பெருமான், இன்னம் - இவ்வளவு நாள் சென்றும், இவட்கு - இப்பெண்ணிற்கு, கடுக்கை நல்காரே - கொன்றை மாலையைக் கொடுத்திலரே, (எ-று.)

பொன்னம், அம் - அசை. நல்காரே, ஏ - இரக்கத்தைக் குறிக்கின்றது. கடுவுண்டார் - இதனை "எண்ணுங்காலும்" என்னுஞ் சூத்திரத்துச் சேனாவரையருரையா னுணர்க. (ருஉ)

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

குன்றிரண்டுசுமந்தொசியுங்கொடியன்னீரவி முத்தங்குடிகொண்டாகம், ஒன்றிரண்டுவடிவானார்திரள்புயத்துமார்பகத்துமுமிழ்தேன்பில்கி, மின்றிரண்டதெனப்புரளும்பொலங்கடுக்கைத்தாமத்தின்விரைத்தாதாடிப், பொன்றிரண்டதெனவிருக்கும்பொறிவண்டுசெய்தவமென்புகலுவீரே.

(இ-ள்.) குன்றுஇரண்டு சுமந்து ஒசியும் கொடி அன்னீர்-இரண்டு மலைகளைத் தாங்கிக்கொண்டு தளர்கின்ற பூங்கொடியை யொத்த தோழியரே! அவி

முத்தம் குடிகொண்டு - காசியை இருப்பிடமாகக்கொண்டு, ஆகம் ஒன்று இரண்டு வடிவு ஆனார் - தமது ஒரு சரீரத்தில் இரண்டு ரூபத்தை உடைத்தாயிருக்கின்றவரது, திரள் புயத்தும் - திரண்ட திருத் தோள்களிலும், மார்பு அகத்தும் - திருமார்பி னிடத்திலும், மின் திரண்டது என புரளும் - மின்னல் திரண்டு வீழ்ந்ததுபோல உருளுகின்ற, உமிழ் தேன்பில்கும் - அரும்புகின்ற தேனைத் துளிக்கின்ற, பொலங்கடுக்கை தாமத்தின் - பொன்னிறமாகிய கொன்றை மாலையினது, விரைத்தாது ஆடி - வாசனை வீசுகின்ற மகரந்தத்தில் விளையாடி, பொன் திரண்டது என - பொன் திரண்டதுபோல, இருக்கும் - இருக்கின்ற, பொறி வண்டு - புள்ளிகளையுடைய வண்டானது, செய் தவம் - செய்த தவம், என் - யாது ? புகலுவீர் - சொல்லுங்கள், (எ-று.)

அர்த்த நாரீச்வர னென்பார், ஆகம் ஒன்றிரண்டு வடிவானு ரென்றார். பொறிவண்டு - வண்டின் சாதி பேதம்; இதற்குச் சுரும்பென்றும் பெயர். புயத்தும் மார்பகத்தும் புரளுந் தாமத்தில் தாதாடியிருக்கும் பொறிவண்டு அவ்வாறுடச்செய்த தவமென்னே ? அதனை அறிந்தருள்கூர்ந்து சொல்வீராயின் யானும் அத்தவத்தைச்செய்து அவ்வின்பத்தைப் பெற்றுத் துன்பநீங்குவேன் என்றிரங்கினபடி. (ருரு)

[கொச்சகக்கலிப்பா.]

புகுமேமதிக்கொழுந்தும்பொன்மாலைப்போது
நகுமேகிளையுநகைத்தாலமக்கென்ன
உகுமேலுயிர்காசியுத்தமனைக்காணத்
தகுமேயப்போதிதழித்தாரும்பெறலாமே.

(இ-ள்.) மதி கொழுந்தும் - பிறைச் சந்திரனும், புகுமே - உதிப்பான்; பொன்மாலைபோதும் - அழகிய மாலைக் காலமும், நகுமே - விளங்கும் [தோன்றும்]; கிளையும் நகைத்தால் - சுற்றத்தாருஞ் சிரித்தால், நமக்கு என்ன - நமக்கு அதனால் வரும் இகழ்வென்ன? உயிர் உகுமேல் - ஆத்துமா உடலைவிட்டுச் செல்லுமானால், காசி உத்தமனை - காசி நாதனை, காணதகுமே - (நம்மாற்) பார்க்கலாம்; அப்போது—, இதழிதாரும் பெறலாமே - கொன்றை மலர் மாலையையும் அடையலாம், (எ-று.)

கிளையுமென்ற எச்ச வும்மையால் தோழியனையும், தாருமென்ற எச்சத்தால் அவரின்பத்தையுங் கொள்க. இனிச்சந்திரனே உதியா நின்றான், மாலைப்பொழுதோ வாராநின்றது, நானே வாடாநின்றேன், எனது வாட்டத்தைக்கண்ட சுற்றத்தாருந் தோழியருமோ பெறத்தகாத பொருளில்வைத்த எனதாசையை நகையா நின்றார், அங்ஙன நகைப்பார் நகைப்பாராக, அதனாற் போந்த குற்றமென்னை? யானே அவ்வவாவை விடுவேனல்லேன், உயிர் உடலோடிருக்குங் காலத்து அவ்வவா நிறைவேறாதாயினும், உடலை நீத்தபின் சாமீப்பியத்தையுஞ் சாரூப்பியத்தையும் பெறுங் காலத்தாயினும் அதனை நிறைவேற்றிக்கொள்வேனெனத் தனது காதலை வெளிப்படுத்தினபடி. (ருசா)

[இதுவுமது.]

ஆமோவவிமுத்தத்தையரேபெண்பழிவீண்
போமோவயிரவர்தஞ்சாதனமும்பொய்யாமோ
தேமோதுகொன்றைச்செழுந்தாமநல்காநீர்
தாமோதருவீருமதுபரந்தாமமே.

(இ-ள்.) அவிமுத்தத்துஐயரே - காசிநாதரே! பெண்பழி - பெண் நிமித்தமாகிய பழிச்சொல், ஆமோ-கூடுமோ? வீண்போமோ - (அது) வீணாகி விடுமோ? வைரவர் தம் சாதனமும் - வைரவக் கடவுளின் ஆஜ்ஞையும், பொய் ஆமோ - அசத்தியமாகுமோ? தேன் மோது கொன்றைசெழுதாமம் - மதுப்பொருந்திய கொன்றை மலரினாற் செய்த செழித்த மாலையை, நல்கா-கொடாத, நீர்தாம் ஓ - நீரோ, உமது பரந்தாமம் - உம்முடைய வீட்டுலகத்தை, தருவீர் - கொடுப்பீர், (எ-று.)

பெண்பழி - பெண்ணை வருத்துவதினாலாகும் பழி. பெண்பழி யென்பது மத்திம தீபமாய் முன்னும் பின்னுங் கூடிற்று. வயிரவர் - ஓர் கடவுள்; பிரமனுமாம். சாதனமும் - உயர்வு சிறப்பு. தேன் - தேமென ஈறுதிரிந்தது; தேன்மொழி மென்மை மேவ இறுதி அழிந்த தென்றலுமாம். தாம் - அசை. வெறுந் தாமத்தைக் கொடாத நீரோ பரந்தாமத்தைக் கொடுப்பீரென்றபடி. நீர் தருவீரோ என ஓகாரத்தை மாறலுமாம். (ருரு)

[கலிநிலைத்துறை.]

பரந்தாமத்தைப்பல்லுயிர்கட்குப்பாலிப்பார்
வரந்தாமத்தைத்தருவதுநீர்பின்வழங்காரோ
புரந்தாமத்திற்பொலிதருகாசிப்புரமானார்
திரந்தாமத்தையெனப்புகலீரேந்திழையீரே.

(இ-ள்.) ஏந்து இழையீர் - அணிந்த ஆபரணங்களையுடைய மாதர்களே! பரந்தாமத்தை - வீட்டுலகத்தை, பல் உயிர்கட்கு - பல ஆத்துமாக்களுக்கு, பாலிப்பார் - கொடுப்பவராகிய சிவபெருமான், தாமத்தைத்தருவது - தமது கொன்றை மாலையைக் கொடுப்பதாகிய, வரத்தை - விருப்பத்தை, வழங்காரோ - கொடாரோ? (அவ்வாறு கொடாராயினும்) புரம் தாமத்தின் பொலிதரு காசி புரம் ஆனார் - தமது இருப்பிடம் ஒளியால் விளங்குகின்ற காசீ நகரமாக்கொண்ட அவரது,தாமத்தை - மாலையை, பின் — பின்பு, (பெறுவது) திரம் என - உறுதியென்று, நீர் புகலீர் - நீங்கள் சொல்லுங்கள், (எ-று.)

மக்கள், தேவர், நரகர், விலங்கு என்னும் நால்வகைச் சாதியிலும் பிறக்கும் உயிரென்பார், பல்லுயிரென்றார். வரத்தை யென ஐகார உருபைமாறுக. பெறுவது - சொல்லெச்சம். (ருசு)

[பாண். நேரிசை ஆசிரியப்பா.]

இழுமென்மழலையின்னமுதுறைப்பப்
பிழிதேனொழுக்கினொழுகுமின்னரம்பின்
வள்ளுகிர்வடிமபின்வான்முறைவருடத்
தெள்விளியெடுக்குஞ்சிறியயாழ்ப்பாண
வாழியகேண்மதிமாற்றமொன்றியானும்
ஏழிசைப்பாணன்மற்றிறைமகனலனே
பலவுடன்பழிச்சுவதொழிகமற்றம்ம
சிலபகல்யானுநின்னிலைமையனாகி
நலம்பாடறியாவிலம்பாடலைப்ப
நீர்வாய்ச்சிதலையுநூல்வாய்ச்சிலம்பியுஞ்
சிலவிடமேய்ந்தசிறுபுன்குரம்பையின்

மசகமுழலங்கும்வாய்ப்படைக்குடலனா
பசையில்யாக்கைத்தசைகறித்துண்ண
வரும்பசிக்குணங்கியும்பெரும்பிணிக்குடைந்துஞ்
சாம்பல்கண்டறியாவாம்பிபூத்த
எலிதுயிலடுப்பிற்றலைமடுத்தொதுங்கிச்
சிறுசிறாலறப்பெருமனைக்கிழத்தி
குடங்கையிற்றாங்கியகொடிற்றினள்குடங்கைக்
கடங்காவுண்கணாறலைத்தொழுக
அழுகுரல்செவிசுடவிழுமநோய்மிக்குக்
களைகண்காணாதலமருமெல்லையிற்
கடவுணல்லூழ்பிடர்பிடித்துந்தக்
குரைபுனற்கங்கைக்கரைவழிச்சென்றாங்குத்
தேம்பழுத்தழிந்தபூம்பொழிற்படப்பையிற்
கடவுட்கற்பகக்கொடிபடர்ந்தேறி
வான்றொடுகமுகின்மடற்றலைவிரித்து
நான்றனதிசைதொறுநறுநிழற்கதலித்
தேங்கனிபழுத்தபூங்குலைவளைப்ப
அம்மலர்க்கொடியிற்செம்முகமந்தி
முடவுப்பலவின்முட்புறக்கனியைப்
புன்றலைசுமந்துசென்றிடுங்காட்சி
குடமிசைக்கொண்டொருகூன்மிடைகிழவன்
நெடுநிலைக்கம்பத்தின்வடமிசைநடந்தோன்
இரும்பூதுபயக்குநறும்பணைமருதக்
கன்னிமதிலுடுத்தகாசிமாநகரம
பெருவளஞ்சுரக்கவாசுவீற்றிருக்கும்
மழுவலனுயர்த்தவழனிறக்கடவுள்
பொன்னடிவணங்கியின்னிசைபாடலும்
அந்நிலைக்கண்ணேயகல்விசும்பொரீஇச்
சுரபியுந்தருவும்பெருவளஞ்சுரப்ப
இருமையும்பெற்றனன்யானேநீயுமத்
திருநகர்வளமைபாடியிருநிலத்
திருநிதிக்கிழவனேக்கறுப்பத்
திருவொடும்பொலிகபெருமகிழ்சிறந்தே.

(இ-ள்.) பிழிதேன் ஒழுக்கின் - பிழிந்த தேனினது பெருக்குப்போல, ஒழுகும் - நேராக வார்கின்ற, இன் நரம்பின் - இனிய வீணை நரம்பினை, வள் உகிர் வடிம்பின் - கூர்மையான நகத்தினுடைய நுனியால், முறை - முறைப்படி, வருட - தடவுவதனால், இழுமென்மழலை இன் அமிர்து உறைப்ப - இழுமென்கின்ற [இனிய] குதலைச்சொல்லையும் இனிய அமிர்தத்தையும் ஒக்கும்படி, தெள் விளி எடுக்கும் - தெள்விளியென்னும் ஓரிராகத்தை எழு

*

ப்புகின்ற, சிறிய யாழ் பாண - சிறிய வீணைப்பாடகனே! வாழிய - நீ வாழ்வாயாக; கேண்மதி மாற்றம் ஒன்று- (யான் சொல்லும்) ஒருவார்த்தையைக் கேட்பாயாக; (அது எதுவெனில்) யானும் எழ் இசை பாணன் - நானும் ஏழுபாட்டிசைகளையும் பாடும் ஓர் பாடகன்; மற்று இறைமகன் அலனே - பின்னை யான் அரசனல்லன் ; மற்று பல உடன் பழிச்சுவது ஒழிக - பின்னைப் பலவாறாகவும் புகழ்வதை (நீ) நீக்குக; சிலபகல் யானும் நின் நிலைமையன் ஆகி-நானுஞ் சிலகாலம் உன்னுடைய நிலைமை போன்ற நிலையை யுடையவனாய், நலம்பாடு அறியா இலம்பாடு அலைப்ப - நன்மையை அறியாது வறுமையானது வருத்தும்படி, நீர்வாய் சிதலையும் - ஜலத்தை வாயிலுடைய கறையானென்னும் பூச்சியும், நூல்வாய் சிலம்பியும் - நூலைவாயிலுடைய சிலந்திப்பூச்சியும், சில இடம் மேய்ந்த - சில இடங்களையுண்ட, சிறு புன் குரம்பையில் - மிகவுஞ் சிறியகுடிசையில், மசகமும் உலங்கும் வாய் படை குடவனும் - மசகமும் கொசுகும் வாயாகியஆயுதத்தையுடைய குடவுண்ணியும், பசை இல் யாக்கை தசை - ஈரமில்லாத உடலிலுள்ள சதையை, கறித்து உண்ண - கடித்துத் தின்ன, வரும்பசிக்கு உணங்கியும் - மேன்மேலும் வளருகின்ற பசியினால் வாடியும், பெரும்பிணிக்கு உடைந்தும் - மிகுந்த வியாதிகளால் தளர்ந்தும், சாம்பல் கண்டு அறியா - சாம்பலைப்பார்த்தும் அறியாத, ஆம்பிபூத்த-காளான் நிறைந்த, எலி துயில் அடுப்பில் - எலி தூங்கப்பெற்ற அடுப்பிலே, தலைமடுத்து ஒதுங்கி-நிறைந்து விலகி, சிறு சிறார் அலற - மிகவுஞ் சிறியமக்கள் அழவும், பெருமனைகிழத்தி - பெரியமனைவி, குடங்கையில் தாங்கிய கொடிற்றினள் - உள்ளங்கையில் வைத்த கதுப்பை யுடையவளாய், குடங்கைக்கு அடங்கா உண்கண் - உள்ளங்கைக்கு அடங்காத [பெரிய] மையுண்டகண்களினின்றும், ஆறுஅலைத்து ஒழுக - (கண்ணீராகிய) நதியானது அலையப்பெற்றுப் பெருகும்படி, அழுகுரல் - அழுகின்ற ஓசை, செவிசுட - காதுகளைச்சுடவும், (இவ்வாறு) விழும நோய் மிக்கு - பெருந்துன்பம் மிகுந்து, களைகண் காணுது - ஓர் தஞ்சமறியாமல், அலமரும் எல்வையில் - வருந்துஞ் சமயத்தில், கடவுள் நல் ஊழ் - தெய்வத்தன்மையுடைய நல்ல விதியானது, பிடர் பிடித்து உந்த - பிடரியைப்பிடித்துத்தள்ள, குரைபுனல் கங்கை கரைவழி சென்று - ஒலிக்கின்ற நீரினையுடைய கங்காநதியினது கரையின் வழியாகப்போய், ஆங்கு - அவ்விடத்தில், தேன் பழுத்து அழிந்த - தேன் முதிர்ந்து வழிகின்ற, பூம்பொழில் படப்பையில் - அழகிய சோலையையுடைய நிலத்தில், கடவுள் கற்பகம் கொடி - தெய்வத்தன்மையுடைய கற்பகவல்லியானது, படர்ந்து - பரவி, ஏறி - மேற்போய், வான்தொடு கமுகின் - ஆகாயத்தை அளாவுகின்ற பாக்கு மரத்தினது, மடல் தலை - மடலையுடைய தலையை, விரித்து - விரியச்செய்து, திசைதொறும் நான்றன - திக்குக்கள் தோறுந்தொங்குவனவாகிய, நறு - மணக்கின்ற, நிழல் - சாயையையுடைய, கதலி - வாழைமரத்தினது, தேங்கனிபழுத்த - இனிய பழங்கள் முதிர்ந்த, பூகுலை வளைப்ப — பூவோடு கூடியகுலையைச் சூழ்ந்திருக்க, அ மலர்கொடியில் - அப் பூங்கொடியில், செம்முகமந்தி - சிவந்த முகத்தையுடைய பெண்குரங்கு, முடவுபலவின் - வளைவையுடைய பலாமரத்தினது, முள்புறம்கனியை - முட்களைப் புறத்தேயுடைய பழத்தை, புன்தலைசுமந்து - சிறியதலையில் தாங்கி, சென்றிடும்காட்சி - போகின்றதோற்றம், குடம்மிசைகொண்டு - குடத்தைத் தலைமேற் றாங்கிக் கொண்டு, நெடுநிலைகம்பத்தின் - உயர்ந்த தன்மையையுடைய கம்பத்திற் கட்டிய, வடம்மிசை நடந்தோன் - கயிற்றின்மேல் நடப்பவனாகிய, ஒருகூன் மிடைகிழவன் - கூன் பொருந்திய ஒருகிழவனது, இறும்பூது பயக்கும் - அ

திசயத்தைத் தருகின்ற, நறுபணை மருதம் - மணக்கின்ற கழனிகளையுடைய மருதநிலத்தையுடைய, கன்னிமதில் உடுத்த - அழியாத மதிலினாற் சூழப்பெற்ற, காசிமாநகரம் - காசி யென்னும் பெரிய நகரத்தில், பெருவளம் சுரக்க - மிக்கவளங்கள் நிறைய, அரசுவீற்றிருக்கும் - தலைமையாய் எழுந்தருளியிருக்கின்ற, மழுவலன் உயர்த்த - மழுப்படையை வலக்கையிலேந்திய, அழல்நிறம் கடவுள் - நெருப்புப் போன்ற [சிவந்த] நிறத்தையுடைய சிவபெருமானது, பொன் அடிவணங்கி - அழகிய திருவடிகளை நமஸ்கரித்து, இன்இசை பாடலும் - இனிய பாட்டைப் பாடின அளவிலே, அங்கிலேக்கண்ணே - அப்பொழுதே, அகல் விசும்பு ஒரீஇ - பரந்த தேவலோகத்தைவிட்டு நீங்கி, சுரபியும் தருவும் பெருவளம் சுரப்ப-காமதேநுவும் கற்பகவிருக்ஷமும் வந்து மிகுந்த வளப்பத்தை நிறைக்க, யானே - (முன் அவ்வாறு வறியனான) நானே, இருமையும் பெற்றனன் - (இம்மை மறுமை) இரண்டையும் அடைந்தேன்; நீயும்—, அத்திருநகர் வளமைபாடி - அவ்வழகிய காசீ நகரத்தினது வளத்தைப்பாடி, இருநிலத்து - (இவ்வுலகம் மேலுலகம்) இரண்டுலகத்திலும், இருநிதிக்கிழவன் - மிகுந்த செல்வத்திற் குரியவனாகிய குபேரன், எக்கறுப்ப-அவமானப் படும்படி, திருவொடும் - செல்வத்துடன், பெருமகிழ் சிறந்து - மிகுந்தஆனந்தம் மேலாய், பொலிக - விளங்குவாயாக, (எ-று.)

இழுமெனல்-அநுகரணவோசை. உறைத்தல்-ஒத்தல். இனி, மழலையினது இனிமை பொருந்த வென்றுமாம். வள் - நெருக்கமும், வலிமையுமாம். சிறிய என்பதைப் பாணனுக்குக் கூட்டுக ; யாழ்க்குக் கூட்டலுமாம். பாண் - பாட்டு; அதனை யுடையவன்-பாணன். வாழிய-வியங்கோள் வினைமுற்று ; ய-விகுதி. மதி-முன்னிலை யசைச்சொல். எழிசை யாவன - குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன; இவையே யேழ்சுரமெனவும், வீணையிலேழ் நரம்பெனவும்படும். மற்று இரண்டும் - வினைமாற்று. அம்ம-இங்கே கட்டுரைக் கண் வருதலால், உரையசை. உடன் - ஈண்டுமுற்றுப் பொருளுணர்த்தி நின்றது. நலம்பாடு - நலம்படுதல்; நலப்பாடென்பதன் விகாரமுமாம். இலம் - வறுமையாகிய குறிப்புணர்த்துவதோ ருரிச்சொல்; இது பெரும்பான்மையும் பாடென்னுந் தொழில்பற்றியல்லது வாராது ; இதனை "இலம்பாடொற்கமாயிரண்டும் வறுமை" என்னும் உரியியற் சூத்திரத்தானுணர்க. இலம்பாடு - இல்லாமை யுண்டாதல் ; இதனை நெற்பாடு பெரிதென்றாற்போலக் கொள்க ; இது நச்சினார்க்கினியர் மதம். இலத்தாற்பற்றப்படுத லென்றுரைப்பது இளம்பூரணர் மதம். சிலவிடம் எய்ந்த எனவும் பிரிக்கலாம். பசகம், உலங்கு-இவைகொசுகின் சாதிபேதம். குடவன் - கோணலான உருவுள்ளது. சிறு புன் என்பன-ஒருபொருட் பன்மொழி. குரம்பை - சிறுவீடு. வாய் கூர்மையாயிருத்தல்பற்றி, வாய்ப்படைக்குடவ னென்றார். யாக்கை - உடல்; தோல், இரத்தம், இறைச்சி, மேதை, எலும்பு, மச்சை, சுவேதநீர் என்னும் எழுவகைத் தாதுக்களினாலும் உயிர்க்கு இடமாக யாக்கப்பட்டது; யாத்தல் - கட்டல். சதை தசையென எழுத்துநிலைமாறிப் போலியாய் வந்தது. அரும்பசி யெனப்பிரித்துப் போக்கற்கரிய பசியுமாம். ஒருபோதுஞ் சமையல் செய்யாத தென்பார், சாம்பல் கண்டறியா வாம்பிபூத்த எலிதுயிலடுப்பென்றார். காளான் - புற்றிற்பூ. சிறுசிறார் - ஆண் பெண் இரண்டற்கும் பொது. பல மக்களைப் பெற்ற பெருஞ் சம்சாரி யென்பார் பெருமனைக் கிழத்தி யென்றார். மனைக்கிழத்தி-வீட்டிற் குரியவள். குடங்கையிற் றாங்கிய கொடிற்றினளாதல் - வருத்தக் குறிப்பு. கற்பகக் கொடி - கற்பகத்தருவின்கீழ் வளர்கின்றகொடி; ஈண்டு அதுபோன்ற கொடிக்கு உவமவாகுபெயர். கற்பகத்திற்குக் கடவுட் டன்மை - வேண்டுவார் வேண்டுவன

வேண்டியாங்கீதல். கமுகும் கதலியும், அவற்றிற் படர்ந்த கொடியும், அதிற் பாய்கின்ற குரங்கும், முட்புறக் கனியும் இவை முறையே கழாயும், அதன் கீழிழிந்தாடுங் கயிறும், கூன்மிடை கிழவனும், குடமும் போன்றன; வடிவுந் தொழிலும் உவமம். நான்றன, நால் - பகுதி. மந்தி - பெண் குரங்கு; "குரங்கு முசுவு மூகமு மந்தி." நடந்தோ னிறும்பூது - நடந்தவனு லுண்டாக்கப் படும் வியப்பென்றபடி. வலன் - வலம், போலி. பொன்னென்பதனை ஆகு பெயராக்கிக் கழலையணிந்த அடி யென்றலுமாம். ஒரீஇ - ஒருவி யென்னும் வினையெச்சந் திரிந்து அளபெடுத்தது. "இருமை வகைதெரிந்து" என் புழிப்போல இருமை யென்பது எண்டெண்ணின்கண் நின்றது. இருமை - கீழ் "சுரபியுந்தருவும் பெருவளஞ்சுரப்ப" என்பதனுற் பொருள் பெற்றமை பெறப்பட்டதனுல், அறமும், இன்பமுமாம்; அன்றியும் பொருளும், இன்ப முமெனினுமிழுக்காது. மகிழ் - முதனிலைத் தொழிற்பெயர். இதுபாண்; அஃதாவது அகவற் பாவால், விறலி, பாணர், கூத்தர், பொருநர் இந்நால் வரு ளொருவர் பரிசிற்குப் போவாரைப் பரிசுபெற்று வருவார் ஆற்றிடைக் கண்டு தலைவன்கீர்த்தியுங் கொடையுங் கொற்றமுஞ்சொல்வது; ஆற்றுப் படை யென்பது மிது. இருநிலம் - பெரிய நில உலகமுமாம். (௫௭)

[வண்டுவிடுதூது. அறுசீர்க்கழிநெடில்ஆசிரியவிருத்தம்.]

சிறைவிரிக்குமதுகரங்காடேம்பிழிபூம் பொழிற்காசித்திருநாடா ளும், மறைவிரிக்குஞ்சிலம்படியார்திரள்புயத்துப் புரளுநறுமலர்ப்பூங் கொன்றை, நறைவிரிக்குமிதழ்க்கரத்தாலூட்டுமதுவிருந்துண்டுநயந்து மற்றென், குறைவிரிநதோரிருவரிசைகூட்டுண்ணுந்திருச்செவிக்கே கூறுவீரோ.

(இ-ள்.) சிறைவிரிக்கும் - சிறகுகளை விரிக்கின்ற, மதுகரங்காள் - வண்டு களே! தேன்பிழி பூபொழில் - தேனைப் பொழிகின்ற அழகிய பூஞ்சோலைகளை யுடைய, காசிதிருநாடு - காசியென்னும் திவ்விய தேசத்தை, ஆளும் - ஆட்சி செய்கின்ற, மறைவிரிக்கும் - வேதங்களால் விரிவாய்ப் புகழப்படுகின்ற, சிலம்பு அடியார் - சிலம்பென்னும் அணியையணிந்த திருவடிகளையுடையவரு டைய, திரள்புயத்து - திரண்டதோள்களில், புரளும்—, நறு - மணக்கின்ற, பூகொன்றை மலர் - அழகிய கொன்றைப் புஷ்பங்களினது, நறைவிரிக்கும் - தேனைப்பொழிகின்ற, இதழ் கரத்தால் - இதழாகிய கைகளினுல், ஊட்டும்—, மது - தேனுகிய, விருந்து - விருந்தை, உண்டு - குடித்து, நயந்து - விரும்பி, என்குறை விரித்து - எனது குறைகளை எடுத்துச்சொல்லி, ஓர் இருவர் இசை கூட்டுண்ணும் - ஒப்பற்ற இரண்டுபேர்களுடைய பாட்டைக்கொள்ளைகொண்டு கேட்கின்ற, திருசெவிக்கே கூறுவீர் - அழகிய காதுகளிற் சொல்வீர், (எ-று.)

மதுகரம் - தேனைஉண்டுபண்ணுவது. இருவராவார் - திருநாவுக்கரசு சுவா மிகளும் திருஞானசம்பந்த மூர்த்திசுவாமிகளும். செவிக்கு - உருபுமயக்கம்.

[கட்டளைக்கலித்துறை.]

கூற்றடிக்கஞ்சிக்குலையுநெஞ்சேயஞ்சல்கோச்செழியன்
மாற்றடிக்கஞ்சுமிடப்பாகனைமள்ளர்கொன்றகருஞ்
சேற்றடிக்கஞ்சமலர்வயற்காசிச்சிவக்கொழுந்தைப்
போற்றடிக்கஞ்சலிசெய்பற்றுவேறுபுகலில்லையே.

(இ-ள்.) கூற்று அடிக்கு அஞ்சி குலையும் நெஞ்சே - யமனுடைய அடிக்குப் பயந்து நடுங்குகின்ற மனமே! அஞ்சல் - பயப்படாதொழிக; கோசெழியன் - பாண்டியராசனுடைய, மால்தடிக்கு - பெரியதண்டுக்கு, அஞ்சும்-பயப்படுகின்ற, இடப்பாகனை - பார்வதியை இடப்பக்கத்திற் கொண்டவனை, மள்ளர் கொன்ற கரு சேற்றடி - உழவர்களால் துவைக்கப்பட்ட கரியசேற்றில், கஞ்சம்மலர் - தாமரைகள் பூக்கப்பெற்ற, வயல் - கழனிகளையுடைய, காசி - காசியிலெழுந்தருளியிருக்கின்ற, சிவம் கொழுந்தை - பரமசிவனை, போற்று-புகழ்ந்து தோத்திரஞ்செய்; அடிக்கு - (அவருடைய) பாதங்களுக்கு, அஞ்சலி செய் - கும்பிடு; புகல் பற்று-அடைதற்கு உரிய பற்றுக்கோடு, வேறு இல்லை.

சேற்றடி, அடி - எழனுருபு. கஞ்சம் - நீரிலுண்டாவது. அடி-அறை.

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

இலைமுகங்குழைத்தபைம்பூணேந்திளமுலையோடாடும்
மலைமுகங்குழைத்தகாசிவரதர்கண்டிலர்கொன்மாரன்
சிலைமுகக்கணைக்கெம்மாவிசெகுத்துணவிருந்ததிங்கட்
கலைமுகம்போழ்ந்தகாயங்களங்கமாய்விளங்குமாறே.

(இ-ள்.) இலைமுகம் குழைத்த பைம்பூண் - இலையுருவமாகச் செய்யப்பட்ட பசிய ஆபரணங்களை யணிந்த, ஏந்து - உயர்ந்த, இளமுலையோடு - இளையதனங்களையுடைய பார்வதியோடு, ஆடும் - விளையாடுகின்ற, மலைமுகம் குழைத்த - மேருமலையினுருவத்தை (வில்லாக) வளைத்த, காசிவரதர்—, ஆவிசெகுத்து - உயிரழிந்து, மாரன்சிலைமுகம் கணைக்கு - மன்மதனுடைய வில்லிற் பொருந்திய அம்பிற்கு, உணவு இருந்த - ஆகாரமாகவிருந்த, திங்கள் கலைமுகம் போழ்ந்த - சந்திரனுடைய கலைகளாற் பிளக்கப்பட்ட, காயம் - உடல், களங்கம் ஆய் - (தனதுவெற்றிக்குக்) குற்றமாய், விளங்கும் ஆறு - தோன்றும் விதத்தை, கண்டிலர் கொல்-அறிந்திலரோ, (எ-று.)

வரதர் - வரங்களைக் கொடுப்பவர்; வரம் - அடியவர் விருப்பம். தனக்குத் தோற்றவன் மீண்டுந் தன்னடியவரை வருத்துதலைக் களங்கமென்றாள். கண்டாராயின், அதனைப் போக்குவரென்றபடி. (கூ0)

[கட்டளைக்கலித்துறை.]

விளங்கனியொன்றெறிவெள்விடையோடும்விழிக்கணுழைந்
துளங்கனியப்புகுந்தாய்விரகானலத்துற்றதென்னும்
வளங்கனிபண்ணைவயல்சூழவிமுத்தவாணநறுங்
களங்கனியென்றுமைகைக்கிளிபார்க்குங்கறைக்கண்டனே.

(இ-ள்.) வளம் கனி பண்ணை வயல் சூழ் அவிமுத்தம் வாண - வளங்கள் மிகுந்த கழனிகளையுடைய நிலங்கள் சூழ்ந்த காசியிலெழுந்தருளி யிருப்பவனே! உமைகைகிளி - பார்வதியினது கையிலுள்ள கிளியானது, நறுகளகனி என்று - மணக்கின்ற களாப்பழமென்று, பார்க்கும் - (உண்ண) நினைக்கின்ற, கறைகண்டனே - கருமையை யுடைய கழுத்தையுடையவனே! விளகனி ஒன்று எறி வெள்விடையோடும் - ஒரு விளாம்பழத்தை வீசின வெள்ளிய விருஷபத்தோடும், விழிக்கண் நுழைந்து - கண்களின் வழியாய்ப் புகுந்து, உளம் - நெஞ்சு, கனிய - உருகும்படி, புகுந்தாய் - (அதிற்) பிரவேசித்தாய்; விரகானலத்து உற்றது - விரகமாகிய தீயாலுண்டாகிய துன்பம், என் ஆம் - யாதாகுமோ? (எ-று.)

திருமாலாதலால், விளங்கனி யொன்றெறி வெள்விடை யென்றார். விரகமாவது - பிரிவாற்றாமை; அஃதாவது வரைந்தெய்தியபின் தலைமகன் அறம் பொருளின்பங்களின் பொருட்டுச் சேயிடையினும் ஆயிடையினுந் தலைமகளைப் பிரிந்துசெல்லும்,செல்லு ஞான்று அப்பிரிவினை அவளாற்றாளாந்தன்மை; அது தீயேபோன்று தானின்றவிடத்தைச் சுடுமாகலான், விரகானலமென்றார். விரகானலம் - (விரக + அநலம்) தீர்க்கசந்தி. பண்ணை - நீர் நிலையுமாம். திருப்பாற்கடலிற் பிறந்த விஷத்தைக்குடித்ததனாற் கறுத்த கண்டத்தை நோக்கிக் கிளி களங்கனியென்று மயங்கினதாகச் சாத்தித்தலால் மயக்கவணி. யாதாகுமோ அறியேனென்றபடி. வளங்கனிதல், கனிதல்—முற்றுப்பெறுதல். (௬௧)

[சந்தத்தாழிசை.]

கண்டமட்டிருண்டுபாதிபசந்துபாதிசிவந்துளார் காசிநாதர்கரத்துவைத்தகபாலமொன்றலதில்லையால், உண்டுகோடியின்மேலுமையர்பதம்பெறக்கடவாரவர்க்கொவ்வொருத்தர்கரத்திலொவ்வொர்கபாலம் வேண்டுமதற்கெலாம், பண்டிருந்தவிரிஞ்சன்மார்தலைமாலையுஞ்செலவாய்விடிற் பாரமென்றலைமேல்வருங்கொலெனுங்கவற்சியினாற்பசுங், கொண்டல்வண்ணர்துயில்கொள்ளவுந்துயிலார்பிதாமகனாரெனுங் கொள்கைகண்டும்விழைந்தவாவவர்பதஞ்சமீரகுமாரனே.

(இ-ள்.) கண்டம் மட்டும்-கழுத்துமாத்திரம்,இருண்டு-கறுத்து, பாதி-இடப்பாதி,பசந்து-பசுமையாய்,பாதி-வலப்பாதி, சிவந்து உளார்-சிவந்திருப்பவராகிய, காசிநாதர்—, கரத்துவைத்தகபாலம் - (தங்) கையில் வைத்திருக்குந் தலையோடு, ஒன்று அலது இல்லை—; ஐயர்பதம்பெறக்கடவார்-சிவபதத்தையடையத்தக்கவர், கோடியின் மேலும் உண்டு—,அவர்க்கு—,(சாரூப்பியமடையுங்காலத்து) ஒவ்வொருத்தர் கரத்தில்—, ஒவ்வொர்கபாலம் வேண்டும் - ஒவ்வொரு தலையோடுவேண்டும்; அதற்கு எலாம்—, பண்டு இருந்த - பழமை தொடங்கியிருந்த, விரிஞ்சன்மார் - பிரமர்களுடைய,தலைமாலையும்—, செலவு ஆய்விடில்—, என்தலைமேல்—, பாரம் வருங்கொல் - (தலைவேண்டுவதாகிய) சுமை வருமோ ? எனும் கவற்சியினால் - என்னுங்கவலையினால், பசுங்கொண்டல் வண்ணர் - கறுத்த மேகநிறத்தையுடைய திருமால், துயில் கொள்ளவும் - நித்திரைபண்ணத் தொடங்கியும், பிதாமகனார் துயிலார் எனும் கொள்கைகண்டும். பிரமதேவன் கண்ணுறங்கானென்னும் கோட்பாட்டை யறிந்தும், சமீர குமாரன் - அநுமான், அவர்பதம் - பிரமபட்டத்தை, விழைந்த ஆ(று) - விரும்பும் விதம்(என்ன) ? (எ-று.)

சத்திபாகம் - பசப்பு. சிவபாகம் - சிவப்பு, அதனை "வலப்பாகஞ் செழும்பவளச்சோதி யென்ன வாணீலச்சோதி யென்ன மற்றைப்பாகங்,கலப்பான திருமேனி" என்பதனானுமுணர்க. அதற்கெலாம்-ஒருமைப்பன்மைமயக்கம். கொள்ள - கொண்டென்னும் வினையெச்சத்திரிபு. (௬௨)

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

கும்பமிரண்டுசுமந்தொசியுங்கொடிநுண்மருங்குலிறுமிறுமென்
றம்பொற்பசுங்கொம்பன்னவளையாகத்தணைத்தவகிலேசர்
செம்பொனிதழித்தெரியலையேசிந்தித்திருப்பத்திரண்முலையும்
பைம்பொனுருவும்பீர்பூத்தபவளச்செவ்வாய்ப்பசுங்கிளிக்கே.

(இ-ள்.) கும்பம் இரண்டு சுமந்து ஒசியும் - (முலைகளாகிய) இரண்டு குடங்களைத்தாங்கிக்கொண்டு தளர்கின்ற, கொடி நுண் மருங்குல் - பூங்கொடி போல் நுண்ணிய இடை, இறும் இறும் என்று-ஒடியும் ஒடியுமென்றெண்ணி, அம்பொன் பசுங்கொம்பு அன்னாளை - அழகிய பொன்மயமான பசிய[இளைய] பூங்கொம்பையொத்த பார்வதியை, ஆகத்து அணைத்த அகிலேசர் - தேகத்தில் (ஒருபாகத்தில்) தழுவிக்கொண்ட விச்வநாதரது, செம்பொன் இதழிதெரியலையே - செம்பொன் னிறமான கொன்றைமாலையையே, சிந்தித்துஇருப்பதினைத்துக் கொண்டிருத்தலால், பவளம் செவ்வாய் பசுங்கிளிக்கு - பவளம் போற் சிவந்த அதரத்தையுடைய பசிய கிளிபோன்ற இப் பெண்ணிற்கு, திரள் முலையும் - பருத்த தனங்களும், பைம்பொன் உருவும் - பைம்பொன்னிறமான மேனியும், பீர்பூத்த - பசலை நிறம் பூக்கப் பெற்றன, (எ-று.)

கும்பம், கிளி - உவம வாகுபெயர்கள். இறுமிறும் - அச்சத்தாலிரண்டடுக்கிற்று. பவளச்செவ்வாய் - பவழத்துக்குச் செம்மையைக் கொடுக்கும் வாயென்றுமாம். (சுரு)

[இரங்தல். கட்டளைக்கலித்துறை.]

கிள்ளைக்கமிர்தமொழிசாற்றிடுங்கிஞ்சுகவிதழ்ப்பெண்
பிள்ளைக்கிடந்தந்தகாசிப்பிரான்பிறையோடுமுடிக்
கொள்ளைச்சிறைவண்டுகூட்டுணுங்கொன்றையுங்கூடவைத்தார்
வள்ளக்கலசமுலைக்கங்கையாளுயிர்வாழ்வதற்கே.

(இ-ள்.) கிள்ளைக்கு - கிளிக்கு, அமிர்தம்மொழி - தேவாமிர்தம் போன்ற பேச்சை, சாற்றிடும் - கற்பிக்கின்ற,கிஞ்சுகம்இதழ் - முருக்க மலர்போன்ற அதரத்தை யுடைய, பெண்பிள்ளைக்கு - பார்வதிக்கு, இடம் தந்த - (தன் திருமேனியில்) இடங்கொடுத்த, காசிப்பிரான்—, வள்ளம் கலசம் முலை கங்கையாள்- வட்டிலையுங் குடத்தையு மொத்த தனங்களையுடைய கங்காதேவி, உயிர்வாழ்வதற்கு-உயிரோடுகூடி யிருந்து சீவித்தற்காக, முடி - திருமுடியில், பிறையோடு - சந்திரனுடன், கொள்ளை சிறை வண்டு கூட்டுணும் - மிகுந்த சிறகுகளையுடைய வண்டுகள் (மதுவைக்) கொள்ளையிட்டுண்கின்ற, கொன்றையும் - கொன்றைமாலையையும், கூடவைத்தார்—, (எ-று.)

கொள்ளைவண்டென இயையும். கொன்றையைக் கூடவையாராயின், அவளும் இவள்போல விரகவேதனையால் வருந்துவளென்றபடி. அவ்வாறு இவளுக்கும் பக்ஷபாதமின்றிக் கொன்றைமாலை தருவாராயின், இவளும் அதனைக்கண் டாற்றி வருந்தாதிருப்பாளென்பது கருத்து. இது நற்றாயிரங்கல்.

[கலிவிருத்தம்.]

வாட்டடங்கண்மழைப்புனன்மூழ்கியே
சேட்டிளங்கொங்கைசெய்தவமோர்கிலார்
தோட்டிளங்கொன்றைசூடிப்பொனம்பலத்
தாட்டுவந்தவவிமுத்தவாணரே.

(இ-ள்.) தோடு இளங்கொன்றைசூடி - இதழ்களையுடைய கொன்றை மலர் மாலையைச்சூடி, பொன் அம்பலத்து - பொன்மயமானசபையில், ஆட்டு - நர்த்தநத்தை, உவந்த - விரும்பின, அவிமுத்தவாணர் - காசிநாதர், வாள் தட கண் மழைபுனல் மூழ்கியே - வாள்போன்ற [கொடிய] விசாலமானகண்

களினின்றும் வழிகின்ற (கண்ணீராகிய) தண்ணீரில் அமிழ்ந்தே, சேடு இளங் கொங்கை - மிகவும் இளைய தனங்களையுடைய இப்பெண், தவம் - தவத்தை, செய் - செய்வதை, ஓர்கிலார் - அறியார், (எ-று.)

அறிவாராயின், முன் தவஞ்செய்தபார்வதியை மணந்ததுபோல இவளை யும் மணப்பாரென்றபடி. சேட்டிள - ஒருபொருட்பன்மொழி. சேடு - இளமை; அழகுமாம். (சுரு)

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

நரைமுதிர்ந்தனகண்கள்பஞ்சார்ந்தனநமன்றமர்வழிக்கொண்டார்
திரைமுதிர்ந்துடலிரங்கினதிரங்கலைசெயலிதுமடநெஞ்சே
உரைமுதிர்ந்தவர்குழாத்தொடுமடைதியாலொழுகொளிமுடிக்கங்கைக்
கரைமுதிர்ந்திடாகலைமதிமுடித்தவர்காசிநன்னகர்தானே.

(இ-ள்.) நரைமுதிர்ந்தன - நரைகள்முதிர்ச்சியடைந்தன; கண்கள்பஞ்சு ஆர்ந்தன - கண்கள் பஞ்சடைந்தன; நமன்தமர்வழிக்கொண்டார் - யமதூதர் பிரயாணப்பட்டார்; திரைமுதிர்ந்து உடல் இரங்கினது - திரைதல் முதிர்ச்சி பெற்றமையால் உடம்புசுருங்கிற்று; மடநெஞ்சே - அறியாமையையுடைய ம னமே! இரங்கலை - (இப்பொழுதும்) பரிதபியாதிராநின்றாய்; செயல் - செய்ய வேண்டிய தொழில், இது—; (அது எதுவெனில்) ஒழுகு ஒளிமுடி - வளர்கி ன்ற காந்தியையுடைய திருமுடியில், கங்கைகரை - கங்காநதியினதுகரையில், முதிர்ந்திடா கலைமதி - கலைகள் முதிர்ச்சிபெறாத [மூன்றாம்பிறைச்] சந்திர னை, முடித்தவர் - சூடியசிவபெருமானது, காசி நல் நகர் - காசியென்னுந் தி ருப்பதியில் வசிக்கின்ற, உரைமுதிர்ந்தவர் குழாத்தொடும் - புகழ்முற்றின அ டியார் கூட்டத்தோடும், அடைதி - சேர்வாயாக, (எ-று.)

உடல் நரைத்தல், மயிர்நரைத்தல் முதலாகப் பல வாதலால், முதிர்ந்தன வெனப் பன்மையாற் கூறினார். நமன் - யமனென்னும் வடமொழிச்சிதைவு.

[வஞ்சித்துறை.]

நகரமாயமறைச், சிகரமானதான்
மகரமாயினான், நிகரில்காசியே.

(இ-ள்.) நகரமாய் - சத்தியாய், மறைச்சிகரமான - சிவமாகிய, தான் - தானே, மகரமாயினான் - பிரபஞ்சரூபியாயிருப்பவனுடைய, நிகர் இல் காசி - ஒப்பற்ற காசிப்பதியிது, (எ-று.)

[கட்டளைக்கலித்துறை.]

இல்லொன்றெனவெனிதயம்புக்காய்மதனெய்கணைகள்
வல்லொன்றுபூண்முலைமார்பகம்போழ்வனமற்றென்செய்கேன்
அல்லொன்றுகூந்தலணங்கரசோடுமொராடகப்பொன்
வில்லொன்றுகொண்டவிமுத்தத்திலேநின்றவிண்ணவனே.

(இ-ள்.) அல்ஒன்றுகூந்தல் - இருட்சிபொருந்திய திருக்குழலையுடைய, அணங்கு அரசோடும் - மங்கையர்க்கரசியாகிய பார்வதிதேவியுடன், ஓர் ஆ

டகம் பொன்வில் ஒன்றுகொண்டு - ஒப்பற்ற ஆடகமென்னும் பொன்மயமான தனுவொன்றை [மேருவை] க்கையிற்கொண்டு, அவிமுத்தத்திலே நின்ற - காசியிலெழுந்தருளி யிருக்கின்ற, விண்ணவனே - சிவபெருமானே! இல்லொன்று எனஎன் இதயம் புக்காய் - ஒருவீடென்றெண்ணி என்மனத்திற் புகுந்தாய்; மதன்எய்கணைகள் - மன்மதன்எய்கின்ற பாணங்கள், வல்ஒன்று பூண்முலை - சூதாடுகருவியை யொத்த ஆபரணங்களையுடைய தனத்தினையுடைய, மார்பு அகம் - என்மார்பினிடத்தை, போழ்வன - பிளப்பன; மற்று என்செய்கேன் - நான் (அதற்கு) என்னசெய்வேன், (எ-று.)-இது தலைவி இரங்கல். (சுஅ)

[மருட்பா.]

விண்ணமிர்துநஞ்சாம்விடமுமமிர்தமாம்
உண்ணமிர்தநஞ்சோடுதவலால்—தண்ணென்
கடலொடுபிறந்தனபோலுந்தடமலர்க்
கடிநகர்க்காசியுண்மேவு
மடலவிழ்கோதைமதர்நெடுங்கண்ணே.

(இ-ள்.) கடி நகர் காசி உள் மேவும் - காவலையுடைய காசியென்னும் நகரத்தில், மேவும் - எழுந்தருளிய, மடல் அவிழ்-கோதை பூவிதழ்கள் மலரப்பெற்ற கூந்தலையுடைய இப்பெண்ணினது, தடமலர் - பெரிய தாமரைப் பூப்போன்ற, மதர் நெடுகண் - களிப்பையுடைய விசாலமான கண்கள், உண் அமிர்தம் நஞ்சோடு உதவலால் - உண்ணத்தக்க அமிர்தத்தையும் விஷத்தையுங் கொடுத்தலால், தண்ணென் கடலொடு - குளிர்ந்த (திருப்பாற்) கடலுடன், பிறந்தனபோலும் - உண்டாயினபோலும்; (இக்கண்களுதவுகின்ற அமிர்த விடங்களுக்கு முன்) விண் அமிர்தும் நஞ்சு ஆம் - தேவாமிர்தமும் விஷமாம்; விஷமும் அமிர்தமாம் - ஹாலாஹலமும் தேவாமிர்தமாம், (எ-று.)

"மாண்பினஞ்சு மமிர்தமுமே, போல்குணத்த பொருகயற்கண்" என்றார் சிந்தாமணியிலும். பாற்கடலிலுள்ள உண்ணமிர்த நஞ்சோடுதவுந்தன்மை கண்ணினிடத்து மிருத்தலின், கடலொடு பிறந்தனபோலு மென்றார். (சுகூ)

[வஞ்சிவிருத்தம்.]

கண்ணொடாவிகருத்துமாய், உணணிறைந்தவொரொண்பொருள்
நண்ணுமாநகரானதால், அண்ணலாரவிமுத்தமே.

(இ-ள்.) அண்ணல் ஆர் - பெருமை பொருந்திய, அவிமுத்தம் - காசி, கண்ணொடு - கண்ணும், ஆவி - உயிரும், கருத்தும் - எண்ணமும், ஆய்—, உள் நிறைந்தது - (அந்தர் யாமியாய்) உள்ளே நிறைந்ததாகிய, ஓர் - ஒப்பற்ற, ஒள் - ஒளி பொருந்திய, பொருள் - வஸ்துவாகிய பரமசிவம், நண்ணும் - எழுந்தருளி யிருக்கின்ற, மா - பெருமையையுடைய, நகர் - நகரமாக, ஆனது—.

கண்ணிலு முயிரிலும் மனத்திலும் நிறைந்திருப்பதென்பார் "கண்ணொடாவி கருத்துமா, யுண்ணிறைந்தவொ ரொண்பொருள்" என்றார். (எ0)

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

முத்தாடிமடித்தலத்தோரிளஞ்சேயையுலகின்றமுதல்வியோடும்
வைத்தாடுவீர்பொதுவினின்றுடுமுமக்கிந்தவாரமென்னே
கொத்தாடுசடையொடுமாநந்தவனத்தேகுறுந்தாணெடும்பூதத்தோ
டொத்தாடுவீரடிகட்கெல்லோமும்பிள்ளைகளென்றுணர்ந்திடீரோ.

(இ-ள்.) உலகுஈன்ற முதல்வியோடும் - லோகமாதாவாகிய பார்வதியாருடன், ஓர் இளஞ்சேயை - ஓரிளம்பிள்ளையை [ஒப்பற்ற குமாரசுவாமியை], முத்தாடி - முத்தமிட்டு, மடித்தலத்துவைத்து - மடியிடத்தில் வைத்துக்கொண்டு, ஆடுவீர் - விளையாடுகின்றவரே! பொதுவில் நின்று ஆடும் உமக்கு—, இந்தவாரம் - இந்தப்பட்சபாதம், என்னே - என்ன? ஆநந்தவனத்தே - காசியில், கொத்து ஆடு சடையொடும் - திரளாகஅசைகின்ற சடையுடன், குறுந்தாள் நெடும்பூதத்தோடு - சிறியகால்களையுடைய பெரிய பூதகணங்களோடு, ஒத்து—,ஆடுவீர் - நர்த்தனஞ்செய்பவரே ! அடிகட்கு - சுவாமியாகிய உமக்கு, எல்லோமும் - யாங்களெல்லோங்களும், பிள்ளைகள்என்றுஉணர்ந்திடீர்—.

விநாயகனைவிடச் சிறியவராதலின், இளஞ்சேயென்றார். பொதுவில் என்பதற்குத் திருச்சிற்றம்பலத்திலென்றும், நடுவுநிலைமையாயென்றும் பொருள்கொள்க. எல்லாவுயிரும் அக்கடவுளருளாற் படைக்கப்பட்டவை யாதலின், அடிகட்கெல்லோமும் பிள்ளைகளென்றார். உணர்ந்திடீர் - அறிவீர்; அறியீரொன்றுமாம். பிள்ளையிடத்துள்ள வளவு அன்பை அடியராகிய எம்மிடத்தும் வைத்தருளல்வேண்டுமென வேண்டியபடி. (௭௧)

[சம்பிரதம். பன்னிருசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

உண்டகிலகோடியுமுமிழ்ந்திடுவன்முகிலேழுமொக்கப்பிழிந்துக
டலேழுடன்வாய்மடுத்திடுவன்வடமேருமூலத்தொடும்பிடுங்கிச்சுழற்
றி, அண்டபகிரண்டமுமடித்துடைப்பன்புவனமவையேழுபிலமேழு
மாயடைவடைவடுக்கியவடுக்கைக்குலைப்பனிவையத்தனையும்வித்தை
யலவாங், கொண்டன்மணிவண்ணனும்முண்டகக்கண்ணனுங்குஞ்சி
தச்செஞ்சரணமுங்குடிலகோடீரமுந்தேடியதலமுமண்டகோளமுந்து
ருவியோடப், பண்டைமறையோலமிடவெளியினடமாடும்பரஞ்சுடர்
பொலிந்தகாசிப்பதியிலடையாமலிப்பல்லுயிர்த்தொகுதியும்பரமபதம
டைவிப்பனே.

(இ-ள்) அகிலகோடியும்-எல்லாஉலகங்களையும், உண்டு உமிழ்ந்திடுவன்—; முகில்ஏழும் - ஏழுமேகங்களையும், ஒக்க - ஒன்றாக, பிழிந்து—, கடல்ஏழ்உடன் -ஏழுசமுத்திரங்களுடன், வாய்மடுத்திடுவன்-வாயாலுட்கொள்வேன் ;வடமேரு - வடக்கின்கணுள்ள மேருபர்வதத்தை, மூலத்தொடும் - அடியோடு, பிடுங்கி சுழற்றி—, அண்டபகிரண்டமும் - இவ்வண்ட பித்தியையும் பேரண்டங்களையும, அடித்து உடைப்பன்—; புவனம்அவை ஏழு - மேலுலகங்களேழும், பிலம்ஏழும்ஆய்-கீழுலகங்களேழுமாய், அடைவு அடைவு-முறைமுறையாய், அடுக்கிய - ஒன்றின்மேலொன்றுவைத்த, அடுக்கை - ஒழுங்கை, குலைப்பன்-கலையச்செய்வேன்; இவை அத்தனையும் - இவைகளெல்லாம், வித்தை அலவாம் - ஜாலமல்லவாம்; கொண்டல் மணிவண்ணனும் - மேகமும்மாணிக்கமும்போற் கரு நிறத்தையுடைய திருமாலும், முண்டகக்கண்ணனும் - தாமரையிடத்திலுள்ளவனாகிய பிரமனும், குஞ்சிதம் செம்சரணமும் - தூக்கிநிற்கின்ற சிவந்த திருவடிகளையும், குடிலகோடீரமும் - சடையையுடைய திருமுடியையும், தேடி - தேடக்கருதி, அதலமும் - பாதாளலோகத்திலும், அண்டகோளமும் - அண்டகோளத்திலும் [மேலுலகத்திலும்], துருவிஓட - தேடிக்கொண்டுவிரைந்துசெல்லவும், பண்டைமறை-அநாதியாகிய வேதங்கள், ஓலமிட-(துதித்து) ஒலிக்கவும், வெளியில் - அம்பலத்தில், நடம் ஆடும் - நர்த்தநஞ் செய்கின்ற, பரஞ்சுடர் - பரஞ்சோதி ஸ்வரூபமாகிய பரமசிவம், பொலிந்த - (எழுந்

தருளி) விளங்குகின்ற, காசிபதியில் - காசியில்—, அடையாமல்—, இப்பல் உயிர்தொகுதியும் - பலவேறு வகையாகிய ஆத்துமாக்களுடைய கூட்டத்தை யும், பரமபதம் - மோக்ஷத்தை, அடைவிப்பன் - சேரச்செய்வேன், (எ-று.)

முகிலேழாவன,— சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவருணம் என்பனவாம். மேலுலகேழுங் கீழுலகேழுமாக அடுக்கப்படுதலால், அடைவடை வடுக்கியவென்றார். கோடீரம் - கிரீடம்; அஃதீண் டாகுபெயர். குடிலம் - வளைவுமாம். காசியிலடைந் தோர்க்கே முத்தியென்பது கருத்தாதலின், காசியிலடையாமற் பரமபதமடை விப்பனென்னப்பட்டது. (௭௨)

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

**விரைகுழைக்குமழைமுகில்காள்விண்டலர்தண் டுழாய்ப்படலைவி டலையென்ன, வரைகுழைக்கும்பொழிற்காசியணிநகருக்கேகுதிரேல றன்மென்கூந்தல், வரைகுழைக்குமுலைகுழைப்பக்குழைதிரடோளழகுமுடிவணங்கியென்னக், கரைகுழைக்குமலைகுழைத்தகண்ணுதற்கென் பேதைதிறங்கழறுவீரே.**

(இ-ள்.) மழை முகில்காள் - குளிர்ந்த மேகங்களே! விரை குழைக்கும் - வாசனை பொருந்திய, விண்டு அலர் - விரிந்து மலர்கின்ற, தண் - குளிர்ச்சியாகிய, துழாய் படலை - திருத்துழாய் மாலையையுடைய, விடலை என்ன - திருமால்போன்ற, பொழில் - சோலையையுடைய, காசிஅணி நகருக்கு - காசியென்னும் அழகிய நகரத்திற்கு, ஏகுதிர் எல் - போகுவீராயின், அறல்மென் கூந்தல் - கருமணல்போலுங் கரிய மெல்லிய கூந்தலையுடைய பார்வதியினது, அரைகுழைக்கும் - இடையை வருத்துகின்ற, வரைகுழைக்கும்-மலையைத் தோற்பிக்கின்ற, முலைகுழைப்ப-தனம் இளகுவித்தலால், குழை திரள்தோள்-இளகிய உருண்ட தோள்களது, அழகு - எழிலுக்கு, முடி வணங்கினென்ன - தலைவணங்கினாற்போல, கரை குழைக்கும் - எல்லையைக் கடந்து வளர்ந்த, மலை - மேருபர்வதத்தை, குழைத்த - (வில்லாக) வளைத்த, கண்நுதற்கு - நெற்றியில் நெருப்புக் கண்ணையுடைய சிவ பெருமானுக்கு, என் பேதைதிறம் - எனது இப்பேதைப் பெண்ணினது தன்மையை, கழறுவீர் - சொல்லுங்கள்.

விரை குழைக்கும் என்பதனை முகிலுக்கு அடையாக்கினால், வித்தை வளரச்செய்கின்ற வெனப்பொருள் கொள்க. நன்றாயலர்ந்த தென்பார், விண்டலரென்றார். படலை - கட்டியமாலை. விடலை - ஆண்மகன், புருஷோத்தமன். விடலை என்றது இன்னாரென விளங்காததனாலே துழாய்ப்படலை யென்றது விளக்கிற்று. மலையினும் வலியதா யிருத்தலால், வரைகுழைக்குமுலையென்றார். பேதைதிறம் - பெண்ணின் விரகவேதனை. இதுமேகவிடுதூது. இது நற்றாயிரங்கித் தூதுவிடுத்தாள். முடியாதகாரியத்திற் றெரியாது தலையிட்டமையால், பேதையென்றாள். (௭௩)

[கட்டளைக்கலித்துறை.]

**கழைக்கரும்பைக்குழைத்தான்மதவேளக்கணத்திலம்பொற் குழைக்கரும்புங்குழைந்திட்டதந்தோகுளிர்தூங்குதுளி மழைக்கரும்பும்பொழிற்காசிப்பிரான்மலையாண்முலைபோழ் முழைக்கரும்புற்றரவாடநின்றாடியமுக்கணனே.**

(இ-ள்.) மழைக்கு - மேகத்தினது, குளிர் தூங்கு துளி - குளிர்ச்சி பொருந்திய நீர்த்துளிகள், அரும்பும் - துளிக்கின்ற, பொழில் - சோலையையுடைய, காசிப்பிரான் - காசி நாதனே! மலையாள் - பார்வதியினது, முலைபோழ் - தனத்தாற் பிளக்கப்பட்ட, முழை - துளையாகிய, புற்று - வன்மீகத்தில், கரு அரவு - (ஆபரணமாகிய) பெரிய பாம்புகள், ஆட - அசைய, நின்று - நிலைபெற்று, ஆடிய - நர்த்தநஞ் செய்கின்ற, முக்கணனே - மூன்று கண்களையுடையவனே! மதவேள் - செருக்கினையுடைய மன்மதன், கழை கரும்பை - கரும்பாகிய வில்லை, குழைத்தான் - வளைத்தான்; அக்கணத்தில் - அக்காலத்தில், அம்பொன் குழை கரும்பும் - அழகிய பொன்னாலாகிய குழையை யணிந்த (இப்பெண்ணாகிய) கரும்பும், குழைந்திட்டது - தளர்ந்தது; அந்தோ - ஐயோ.

கரும்புக் கழையென மாறுக. மூங்கில் வில்லாக இருப்பதாதலின், அதற்குரிய கழையென்னும் பெயராற் கூறினார். மழைக்கு - உருபு மயக்கம். இனி, குளிர்ச்சி பொருந்திய தேன்றுளி மழைபோ லரும்பும் பொழிலென்றுமாம். பிரான் - விளி. மலைமகளை மலையாளென்றார். தோள்கள் மலைபோலிருத்தலால்-அதிலுள்ள துளையை மலைக்குகைக்குரிய முழையெனக் கூறினார். (எசு)

[கட்டளைக்கலித்துறை.]

கண்ணஞ்சனத்தைக்கரைத்தோடுநீர்கடல்செய்யநின்றாள்
உண்ணஞ்சனத்துக்குமஞ்சவைத்தாருமபரோட்டெடுப்பப்
பண்ணஞ்சநச்சமிர்தாக்கொண்டகாசிப்பரமர்பச்சைப்
பெண்ணஞ்சநச்சரவார்த்துநின்றாடுமப்பிஞ்ஞகரே.

(இ-ள்.) உம்பர் - தேவர்கள், ஓட்டு எடுப்ப - (பயந்து) ஓடுதலைச்செய்ய, பண் அஞ்ச - மிகவும் பயப்பட, (அதற்கிரங்கி) நஞ்சு - விடத்தை, அமிர்தா கொண்ட - அமிர்தம்போல உட்கொண்ட, காசி பரமர் - காசி நாதராகிய, பச்சை பெண் அஞ்ச-பசிய நிறத்தையுடைய பார்வதி பயப்படும்படி, நச்சரவு - விஷத்தையுடைய சர்ப்பங்களை, ஆர்த்து நின்று - (ஆபரணமாகக்) கட்டிக்கொண்டு நின்று, ஆடும் - நர்த்தநஞ் செய்கின்ற, அப்பிஞ்ஞகர் - அச்சிவபெருமான், அஞ்சனத்தை - (இட்ட) மையை, கரைத்து - கரையச்செய்து, ஓடும் - வழிகின்ற, கண்ணீர் - கண்ணீரானது, கடல்செய்ய - கடலை யுண்டாக்கும்படி, நின்றாள் - நின்ற இப்பெண்ணினது, உண் அனத்துக்கும் - உண்ணுஞ் சோற்றிற்கும், நஞ்சு-விஷத்தை, அஞ்ச-பயப்படும்படி, வைத்தார்—.

இனி, தானுண்ணும் நஞ்சை நின்றாளாகிய அன்னத்திற்கும் வைத்தாரென்றுமாம். ஓட்டு - முதனிலைதிரிந்த தொழிற்பெயர். பண் - மிகுதி. ()

[கட்டளைக்கலிப்பா.]

கருகுகங்குற்கரும்பகரேர்ந்துவெண்
கலைமதிக்கொலைக்கூற்றங்கவர்ந்துயிர்
பருகுநற்குக்காத்தால்விரிநிலாப்
பாசம்வீசிவளைந்ததிங்கென்செய்கேன்
முருகுநாறுகுழற்பொலங்கொம்பனீர்
முத்தர்வாழவிமுத்தமுநெக்குடைந்
துருகுபத்தர்தஞ்சித்தமுங்கோயிலா
வுடையநாதற்குரைத்திடுவீர்களே.

(இ-ள்.) வெண்கலைமதி கொலைகூற்றம் - வெள்ளிய கலைகளையுடைய (பூர்ண) சந்திரனாகிய கொல்லுதற்றொழிலையுடைய யமனானவன், கருகு கங்குல் கருபகடு ஊர்ந்து - கறுத்த ராத்திரியாகிய கரிய எருமைக்கடாவை ஏறிக்கொண்டு, உயிர் கவர்ந்து பருகுதற்கு - எனது உயிரைப் பறித்துக் குடித்தற்கு, கரத்தால் - கிரணமாகிய கையால், விரிநிலா பாசம்வீசி - விரிந்த காந்தியாகின்ற பாசக்கயிற்றை எறிந்து, வளைத்தது - (என்னைச்) சூழ்ந்துகொண்டான்; இங்கு என்செய்கேன் - (இதற்கு) இவ்விடத்தில் (நான்) என்னசெய்வேன்? (இதனை) முருகு நாறுகுழல் பொலங்கொம்பு அனீர் - வாசனை வீசுகின்ற கூந்தலையுடைய பொன்னாலாகிய பூங்கொம்பையொத்த மாதர்களே! முத்தர்வாழ் அவிமுத்தமும் - முத்திபெறற்குரியோர் வாழ்கின்ற காசியையும், நெக்கு உடைந்து உருகு பத்தர்தம் சித்தமும் - கனிந்துதளர்ந்து கரைகின்ற அடியார்களுடைய நெஞ்சையும், கோயில் ஆ உடைய நாதற்கு - ஆலயமாக உடைத்தாயிருக்கின்ற (விச்சுவ) நாதருக்கு, உரைத்திடுவீர் - சொல்லுவீராக.

முத்திபெறற்குரியவரைத் தெளிவுபற்றிப் பெற்றவர்க்குரிய முத்தரென்னும்பெயராற் கூறினார்; இனி, இந்நகரின் பெருமைநோக்கி நிரதிசய வின்பத்தைத் தருகின்ற மீளாநெறியாகிய முத்தியைப்பெற்றவரும் மீண்டுவர விரும்புகின்றாரென்னுங் கருத்தாற் கூறினாரெனினுமமையும்; இனிச் சீவன்முக்தருமாம். (எசு)

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

**உரைத்தநான்மறைச்சிரத்துமைந்தவித்தவருளத்தும்வண்டொருகோடி, நிரைத்தபூங்குழனிரைவளையவளொடுநின்றவருறைகோயில், குரைத்ததெண்டிரைக் கங்கைமங்கையர்துணைக் கொங்கைமான்மதச்சேற்றைக், கரைத்திருங்கடல்கருங்கடலாச்செயுங்காசிமாநகர்தானே.**

(இ-ள்.) உரைத்த நால்மறைசிரத்தும் - (தான்வெளிப்படுத்துக்) கூறிய நான்கு வேதங்களின் முடிவிலும், ஐந்து அவித்தவர் உளத்தும் - புலன்களிற் செல்கின்ற அவாவைந்தனையும் அடக்கினமுனிவரது திருவுளத்திலும், வண்டு ஒருகோடி நிரைத்த பூங்குழல் நிரைவளையவளொடு - பல வண்டுகள் மொய்த்து நிறையப்பெற்ற மலர்களை முடித்த கூந்தலையும் வரிசையாகிய வளையல்களையு மணிந்த பார்வதியுடன், நின்றவர் உறைகோயில் - எழுந்தருளி யிருக்கின்ற விச்வநாதர் (திருவுள்ள முவந்து) எழுந்தருளியிருக்கு மாலயம் (யாதென்னில்), குரைத்த தெள்திரை கங்கை - ஒலிக்கின்றதெளிவாகியஅலைகளையுடைய கங்காநதி, மங்கையர் துணை கொங்கை மான்மதம் சேற்றை - (அந்நகரத்துப்) பெண்களினது இணையிணையாகிய தனங்களிற் பூசிய கஸ்தூரிக் குழம்பை, கரைத்து - கரையச்செய்துகொண்டு போய், இரு கடல் - பெரிய கடலை, கரு கடலா செயும் - கறுத்தகடலாச்செய்தற்கிடமான, காசிமாநகர்—.

இது கடலினது கருமைக்கும், கங்கைமங்கையர் துணைக்கொங்கை மான்மதச்சேற்றைக் கரைத்தற்குஞ் சம்பந்தமில்லாதிருக்கச் சம்பந்தத்தைக் கற்பித்தலால் தொடர்புயர்வுநவிற்சியணி; கடலின் கருமைக்குக் காரணமாகாததைக் காரணமாகச் சொல்லுதலால் கற்றோர்நவிற்சியணியுமாம். இனி, அந்நாட்டு மகளிரது செல்வமிகுதியைச் சொல்லுதலாகிய வீறுகோளணி தொனிக்கின்றது. ஐந்துமென்னும் முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. புலன்களைந்தாதலால், அவற்றின்கட்செல்லும் அவாவும் ஐந்தாயின. புலனைந்து - சுவைமுதலியன. (எஎ)

[கட்டளைக்கலிப்பா.]

மானமொன்றுநிறையொன்றுநாணொன்று
மதியமொன்றுகுயிலொன்றுதீங்குழற்
கானமொன்றுகவர்ந்துணுமாமதன்
கணைக்கிலக்கென்னுயிரொன்றுமேகொலாம்
வானமொன்றுவடிவண்டகோளமே
மவுலிபாதலமேழ்தாண்மலையெட்டும்
நானமொன்றுபுயமுச்சுடருமே
நயனமாப்பொலியும்மகிலேசனே.

(இ-ள்.) வானம் ஒன்றுவடிவு – ஒப்பற்ற ஆகாயம் உருவமாகவும், அண்டகோளமே மவுலி - அண்டகோளமே சிரமாகவும், பாதலம் ஏழ்தாள் - கீழுலகங்களேழும் திருவடியாகவும், மலை எட்டும் நானம் ஒன்றுபுயம் - அஷ்டகுலபர்வதங்களும் கஸ்தூரிபூசிய தோள்களாகவும், முச்சுடருமே நயனம் ஆ–மூன்றுசுடருங் கண்களாகவும், பொலியும் - விளங்குகின்ற, அகிலேசனே - விசுவநாதா! மானம் ஒன்று நிறை ஒன்று நாண் ஒன்று – (என்னிடத்துள்ளது) ஒருமானம் ஒருநிறை ஒருநாணம்; (இவற்றை இலக்காக வுடையது) மதியம் ஒன்று குயில் ஒன்று தீங்குழல் கானம் ஒன்று - ஒருசந்திரன் ஒருகுயில் இனிய ஒரு வேய்ங்குழலினிசைப் பாட்டு (என்னுமிவை); கவர்ந்து உணும் மாமதன் கணைக்கு - பறித்துக்குடிக்குந் தொழிலையுடைய மன்மதனது மிகுந்த பாணங்களுக்கு, இலக்கு - எதிர், என் உயிர் ஒன்றுமேகொல் - எனதுபிராணன் ஒன்றுதானோ ? (எ-று.)

நிறை – தலைமகள் மனத்தடக்கற் பாலனவற்றை அடக்குதல்: "நிறையெனப்படுவது மறைபிறரறியாமை" என்றார் பிறரும்; இது நாணுள்ளதுணையும் அழியாதது. நாண் - மனமொழிமெய்கள தொடுக்கம்; இழிவாயின செய்தற்கண் விலக்குவது மதிமுதலியன காமோத்தீபகமாய் மானமுதலியவற்றைக் கெடுத்தலால். இவ்வாறுகூறினர். குயில் - அதனோசையைக் குறித்தலால் ஆகுபெயர். ஐங்கணைக் குயிரொன்றோ இலக்கென்பார், இழிவுசிறப்பும்மை கொடுத்துக்கூறினர். இனி, அந்நான்கிற்கும் இந்நான்கிலக்காதல் உன் பெருமைக்குத் தகுமோவென்றுமாம். (எஅ)

[நேரிசைவெண்பா.]

அகிலாண்டமாயகண்டமானவகிலேசா
முகிலாண்டசோலையவிமுத்தா—நகிலாண்ட
சின்னவிடைப்பாகாதிருநயனஞ்செங்கமலம்
அன்னவிடைப்பாகாவருள்.

(இ-ள்.) அகிலாண்டமாய் - எல்லா அண்டங்களுமாய், அகண்டம் ஆன - எல்லாமாகிய, அகிலேசா - விசுவநாதனே! முகில் ஆண்ட சோலை - மேகங்கள் தவழ்கின்ற சோலைகளையுடைய, அவிமுத்தா - காசிநாதனே! நகில் ஆண்ட சின்ன இடைபாகா - முலைகளைத்தாங்கிய சிறுத்த இடையினையுடைய பார்வதியைக்கொண்ட (இடப்) பங்கையுடையவனே! திரு நயனம் செம்கமலம் அன்ன-அழகியகண்கள் செந்தாமரைப் பூவையொத்த, விடைபாகா - விருஷபத்தையூர்ந்து நடத்துபவனே! அருள் - (நீ) கிருபைசெய், (எ-று) (எகூ)

[இரங்கல். அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

அருகுமதன்குழைத்தகழைதெறித்தமுத்தேறுண்டெழுவண்ட ரற்றுமோசை, பெருகுசிறுநாணொலியென்றறிவழிந்துபேதுறுமிப்பே தைக்கென்னும், உருகுபசும்பொன்னசும்புதசும்புவிசும்பிரவியெனவு டைந்துகஞ்சம், முருகுயிர்க்கும்பொலங்குடுமிவிமானத்திற்பொலிந்த வவிமுத்தனே.

(இ-ள்.) உருகு-உருகின, பசும்பொன் - பசியபொன்னினது, அசும்பு - மிருதியினாற் செய்யப்பட்ட, தசும்பு - கலசத்தை, விசும்பு இரவிஎன - ஆகாயத்திற்செல்கின்ற சூரியனென்றெண்ணி, கஞ்சம் - தாமரைகள், உடைந்து-மலர்ந்து, முருகு உயிர்க்கும் - வாசனையை வீசுதற்குக் காரணமான, பொலங்குடுமி — பொற்சிகரத்தையுடைய, விமானத்தில்-கோயிலில், பொலிந்த-எழுந்தருளியிருக்கின்ற, அவிமுத்தனே - காசிநாதரே! அருகு - சமீபத்தில், மதன் - மன்மதனால், குழைத்த-வளைக்கப்பட்ட, கழை - (வில்லாகிய) கரும்பினின்றும், தெறித்த - சிதறின, முத்து - முத்துக்கள், ஏறுண்டு - மேலே தைத்தலால், எழுவண்டு - கிளம்பினவண்டுகள், அரற்றும் - ஒலிக்கின்ற, ஓசை - ஒலியை, பெருகு சிறு நாண் ஒலி என்று - நீண்டநுண்ணிய வின்னாணினோசையென்றெண்ணி, அறிவு அழிந்து - புத்திகலங்கி, பேது உறும் - மயங்கிவருந்துகின்ற, இப்பேதைக்கு - இப்பெண்ணிற்கு, என்னும் - என்ன முடிவாகுமோ? (எ-று.)

இது தசும்பை இரவியென மயங்குதலாகிய மயக்கவணியும், தசும்பிற்கும் கஞ்சம்முருகுயிர்த்தற்குஞ் சம்பந்தமில்லாதிருக்கச் சம்பந்தத்தைக்கற்பித்தலாகிய தொடர்புயர்வுநவிற்சியணியும் விரவிவந்த சேர்வையணி.

[கட்டளைக்கலித்துறை.]

முத்திக்குவேட்டவர்மோட்டுடற்பாரமுடைத்தலையோ
டத்திக்குஞ்சாம்பற்குமோம்பினாரிவையன்றியப்பாற்
சித்திப்பதுமற்றிலைபோலுங்காசிச்சிவபெருமான்
பத்திக்குக்கேவலமேபலமாகப்பலித்ததுவே.

(இ-ள்.) முத்திக்கு வேட்டவர் - மோக்ஷத்தைப் பெறவிரும்பினவர், மோடு உடல்பாரம்-பெரிய உடம்பாகிய சுமையை, முடைதலையோடு அத்திக்கும் சாம்பற்கும் - நாற்றத்தையுடைய கபாலத்தையும் எலும்பையும் விபூதியையும் பெறுதற்கு, ஓம்பினர் - வளர்த்தார்கள்; இவை அன்றி - கீழ்க்கூறியவையல்லாமல், அப்பால் - பின்பு, சித்திப்பது மற்று இலைபோலும் - கைகூடுவது வேறொன்று மில்லைபோலும்; காசி சிவபெருமான் பத்திக்கு - காசியிலெழுந்தருளியிருக்கின்ற சிவபெருமான் விஷயமான அன்பிற்கு, கேவலமே—, பலமாக - பயனாக, பலித்தது - வாய்த்தது. (எ-று.)

கேவலம் - பயனின்மையும், மோக்ஷமுமாம். சாரூப்பியம் உண்டாவது பற்றி, இவ்வாறுகூறினார். பெருமான்பத்தி - விஷயசம்பந்தம். இது நிந்தாஸ்துதியலங்காரம். (அக)

[கலிநிலைத்துறை.]

பல்வேறுருவாய்நின்றருள்காசிப்பதியுள்ளீர்
வில்வேறில்லைப்பூவலதம்பும்வேறில்லை

[அறுசீர்க்கழிநெடில்ஆசிரியவிருத்தம்.]

முத்துநிரைத்தகுறுநகையீர்முளரிக்கணையான்கணைகடிகைப்
பத்துநிரைத்தானினித்தொடுக்கிற்பாவைக்கொருதிக்கிலைபோலும்
ஒத்துநிரைத்தவுடுநிரையோடொன்றோபலவோவெனவரும்பூங்
கொத்துநிரைத்தபொழிற்காசிக்குழகற்கொருவர்கூறீரே.

(இ-ள்.) முத்துநிரைத்த குறுநகையீர் - முத்துக்களை வரிசைப்படுத்தினாற் போன்ற பற்களையுடையவரே ! முளரிகணையான் - தாமரைமுதலிய புஷ்பங்களைப் பாணமாக உடைய மன்மதன், கணை - (தனது) பாணங்களை, கடிகை பத்தும் - பத்துநாழிகை காலமாய், நிரைத்தான் - எய்தான்; இனி தொடுக்கில்- இனிமேல் எய்தால், பாவைக்கு ஒருதிக்கு இலைபோலும் - இப்பெண்ணிற்கு ஒருகதியில்லைபோலும்; (ஆதலால்) ஒருவர் - (உங்களில் எவரேனும்) ஒருவர், நிரைத்த உடு நிரையோடு - குவியலாயுதித்த நக்ஷத்திர சமூகத்தோடு, ஒன்றோ பலவோ என - ஒன்றுதானோ அநேகமோ என்னும்படி, ஒத்துவரும் - சமமாய் வளர்கின்ற, பூ கொத்து - புஷ்பக்கொத்துகளை, நிரைத்த - மிகுதியாகவுடைய, பொழில் - சோலையையுடைய, காசி குழகற்கு - காசிநாதருக்கு, கூறீர்- (இதனைச்) சொல்லுங்கள், (எ-று.)

முளரி - மற்றையவற்றிற்கும் உபலக்ஷணம். ஒருதிக்கிலைபோலும் - என்பதற்கு, திக்பிரமம் [திசைதப்பிமயங்குதல்] உளதாம்போலும் என்றும் உரைக்கலாம். இனி, ஒத்து நிரைத்த உடு நிரை என்றுங்கூட்டலாம். (அஎ)

[கட்டளைக்கலித்துறை.]

கூற்றடிக்கஞ்சிமுறையோவெனக்குலநான்மறையும்
போற்றடிக்கஞ்சம்புகலடைந்தேமுனைப்போலவைத்தாற்
சேற்றடிக்கஞ்சவயற்காசிநாதசெருப்படிக்கும்
மாற்றடிக்குந்தொண்டர்வில்லடிக்கும்புகன்மற்றில்லையே.

(இ-ள்.) சேற்றடி கஞ்சம் வயல் காசிநாத - சேற்றினிடத்திற்றாமரையையுடைய கழனிகளையுடைய காசித்தலைவனே ! கூற்று அடிக்கு அஞ்சி - யமனுடைய அறைக்குப்பயந்து, முறையோஎன - குறைகூறிக்கொண்டு [அபயமிட்டு], குலம் நால்மறையும் போற்று-சிறந்த நான்குவேதங்களுந் துதிக்கின்ற, அடிக்கஞ்சம் - (உனது) திருவடித்தாமரையை, புகல் அடைந்தேம் - சரணமாக அடைந்தேம்; உனைபோலவைத்தால் - (நீசாரூப்பியத்தால் அவ்வாறடைந்த எங்களையும்) உன்னைப்போலச் செய்வாயானால், தொண்டர்-பக்தர்களுடைய, செருப்பு அடிக்கும் - செருப்பினதடிக்கும், மால்தடிக்கும் - பெரிய பிரம்படிக்கும், வில் அடிக்கும் - விற்குதையாலடிக்கும் அடிக்கும், புகல்மற்று இல்லை - வேறு சரணமில்லை, (எ-று.)

இது வஞ்சப்புகழ்ச்சியணி; இதனைவடநூலார் வியாஜஸ்துதியென்ப. ஓரடிக்குப்பயந்து வேறடைக்கலமகப்படாது உனதடியை யடைந்தால், நீ பலவடியைக்கொடுப்பாயாகின், அவற்றைப் போக்க வேறியாவரைச் சரண் புகுவோமென்றபடி. (அஅ)

[கட்டளைக்கலிப்பா.]

இல்லையென்பதில்லையோர்மருங்கிலே
யெவ்வறங்களுமுண்டோர்மருங்கிலே
கொல்லுகின்றதொழுதருங்கூற்றமே

கூறுமாற்றமெழுதருங்கூற்றமே
வில்லுமேற்றிடுநாணும்பொன்னாகமே
விடுகணைக்குண்டுநாணும்பொன்னாகமே
மல்லல்மார்பின்மணிமுத்தமென்பதே
வாசமையர்க்கவிமுத்தமென்பதே.

(இ-ள்.) ஓர் மருங்கிலே - (உமது) ஒருபக்கத்திலே, இல்லை என்பதுஇலை - (இரப்பவர்க்கு) இல்லை என்று சொல்லுவதில்லை; ஓர் மருங்கிலே - (உமது) ஒரு இடையிலே, எவ்வறங்களும் உண்டு - எல்லாத் தருமங்களும் உள்ளன; கொல்லுகின்றது - (உம்மாற்) கொல்லப்படுவது, எழுதரு கூற்றமே - (பிறரைக்கொல்ல) எழுகின்ற யமன்றான்; கூறும்மாற்றம் - (நீர்) பேசும்பேச்சு, எழுத அரு கூற்றமே - எழுதாக்கிளவியாகிய வேதங்கள்தாம்; வில்லும் ஏற்றிடும் நாணும் - (உமது) தனுவும் (அதில்) ஏறச்செய்கின்ற நாணும், பொன்நாகம் ஏ - பொன் மலையும் அழகிய வாசுகியுமாம்; பொன் ஆகம் ஏ விடுகணைக்கு உண்டு நாணும் - (எனது) அழகிய சரீரமானது (மன்மதன்) விடுகின்ற (புஷ்ப) பாணத்திற்கு இலக்காய் வெட்கிவருந்தும்; மல்லல்மார்பில்மணி - (உமது) பெருமையையுடைய திருமாற்பிற் பூணும் இரத்தினாபரணம், முத்தம் என்பதே-முத்துமயமானதே; ஐயர்க்கு - தலைவராகிய உமக்கு, வாசம் - இருப்பிடம், அவிமுத்தம் என்பதே - காசி என்பதுவே, (எ-று.)

கடவுளினருளுடைமைபற்றி இல்லை யென்பதிலையோர் மருங்கிலேயென்றும், முப்பத்திரண்டறங்களையுஞ் செய்யும் பார்வதியைப் பாகத்திற்கொண்டமை பற்றி எவ்வறங்களுமுண்டோர் மருங்கிலேயென்றும், தன்னை யடைந்தவனை முத்தியிற் சேர்த்தலாலும், மார்க்கண்டேயருக்காக உதைத்தமையாலும் கொல்லுகின்ற தெழுதருங் கூற்றமே யென்றும், வேதங்களை உபதேசித்தமையாற் கூறுமாற்ற மெழுதருங் கூற்றமே யென்றும், திரிபுரசங்கார காலத்தில் மேருவை வில்லாகவும் வாசுகியைக் நாணாகவுங் கொண்டமையால் வில்லுமேற்றிடுநாணும் பொன்னாகமே யென்றுங் கூறப்பட்டது. கூற்றம் - சொல். பொன்னாகம் - பொல் + நாகம் எனப்பிரித்துத் தந்தடசப்படுமாம். கணைக் குண்டெனப் பிரித்து வில்லுண்டையுமாம். இனி, ஐயர்க்கென்பதைப் படர்க்கையாக்கிப் பலவிடத்துங் கூட்டலுமாம். (அக)

[கலிவிருத்தம்.]

என்பணிக்கும்பணியென்றிரந்தபோ(து)
என்பணிக்கும்பணிதிக்குமேக்கென்றார்
என்பணிக்கும்பணியாயிருந்ததோர்
என்பணிக்குமின்பாமகிலேசர்க்கே.

[இப்பாட்டிற்குப் பொருள் நன்குவிளங்கவில்லை; விளங்கினவுடனே வெளியிடப்படும்.]

[நேரிசைவெண்பா.]

கேயூரமூரக்கிளர்தோளகிலேசர்
மாயூரமூருமொருமைந்தற்குத்—தீயூரும்
அவ்வேலையீந்தாரடித்தொழும்புசெய்தொழுகும்
இவ்வேலையீந்தாரெமக்கு.

(இ-ள்.) கேயூரம் ஊர - கேயூரம் பொருந்த, கிளர் தோள் - விளங்குகின்ற தோள்களையுடைய, அகிலேசர் - விசுவநாதர், மாயூரம் ஊரும் - மயிலை வாகனமாக நடாத்துகின்ற, ஒரு மைந்தர்க்கு - ஒப்பற்ற குமாரக் கடவுளுக்கு, தீ ஊரும் - நெருப்புப்போற் கொடுமை பொருந்திய, அவ்வேலை - அந்தவேலை, ஈந்தார் - கொடுத்தார்; அடிதொழும்புசெய்து ஒழுகும் இவ்வேலை - (தமது) திருவடிகளுக்கு அடிமைசெய்து வருகின்ற இவ்வேலையை, எமக்கு ஈந்தார் - எங்களுக்குக் கொடுத்தார், (எ-று.)

கேயூரம் - தோளணி. மாயூரம் - மயூரமென்பதன் விகாரம். (சுக)

[அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

குருகைவிடுத்தாளெனக்குருகேகூறாய்சுகத்தைவிடுத்தாளென்
றருகுவளருஞ்சுகமேசென்றறையாய்நிறைநீர்தெரிந்துபால்
பருகுமனமேயனம்விடுத்தபடிசென்றுரையாய்படிவருளத்
துருகுபசும்பொன்மதிற்காசியுடையார்வரித்தோலுடையார்க்கே.

(இ-ள்.) படிவர் - முனிவர்களுடைய, உளத்து - திருவுள்ளம்போல, உருகு - உருகின, பசும்பொன் - பசிய பொன்மயமான, மதில்-அரணையுடைய, காசி - காசியை, உடையார் - (திருப்பதியாக) உடையவரும், வரித்தோல் உடையார்க்கு - கோடுகளையுடைய (புலித்) தோலாகிய ஆடையை யுடையவருமாகிய சிவ பெருமானுக்கு, குருகே - குருகே! [நாரையே], குருகை விடுத்தாளென கூறாய் - (இப்பெண்) குருகை [கைவளையை] விட்டாளென்று சொல்வாய்; அருகுவளரும் சுகமே - (அந்நாரையின்) பக்கத்திற் பொருந்திய சுகமே! [கிளியே], சுகத்தை விடுத்தாள் என்று சென்று அறையாய் - சுகத்தை [இன்பத்தை] விட்டாளென்று போய்ச்சொல்வாய்; நிறை நீர்தெரிந்து பால்பருகும் அனமே - (பாலையு நீரையுங் கலந்துவைத்தால்) அதில் நிறைந்த சலத்தை இன்னதென்று நிச்சயித்து நீக்கிப் பாலைமாத்திரங் குடிக்கின்ற அனமே! [ஹம்ஸமே], அனம் விடுத்தபடி சென்று உரையாய் - அனனத்தை [சோற்றை] விட்ட தன்மையைப் போய்ச்சொல்வாய், (எ-று.)

இது தன்னைப் பிறள்போற் கூறித்தூது விடுத்திரங்கினள்; நற்றாயிரங்கலுமாம். இனி, குருகைவிடுத்தாளென்பதற்கு அழகைக் கைவிட்டாளென்று மாம். அன்னமென்னும் வடமொழிச் சிதைவுகள் விகாரமாயின. படிவருளத்தையுங்காசியையும் இடமாகவுடையவ ரென்றுமாம். அருகு - தன்பக்கமுமாம்.

[இதுவுமது.]

உடுத்தகலையுமேகலையுமொழுகும்பணியும்விரும்பணியும்
தொடுத்தவளையுங்கைவளையுந்துறந்தாளாவிதுறந்தாலும்
அடுத்ததுமதுபரந்தாமமதனுவிதழிப்பரந்தாமம்
விடுத்துவிடுவாளலளெனப்போய்விளம்பீர்காசிவேதியர்க்கே.

(இ-ள்.) உடுத்த கலையும் - (அரையில்) உடுத்துக்கொண்ட சேலையையும், மேகலையும் - மேகலாபரணத்தையும், ஒழுகும் பணியும் - நிகழுஞ் செய்கைகளையும், விரும்பு அணியும் - விரும்புகின்ற ஆபரணங்களையும், தொடுத்தவளையும் - பூக்களாற் றொடுத்த மாலையையும், கைவளையும் - கையிலணிந்த வளையல்களையும், துறந்தாள் - விட்ட இப்பெண், ஆவி துறந்தாலும் - உயிரை விட்டாலும்,

அடுத்தது உமது பரந்தாமம் - பொருந்த வருவது உம்முடைய பரமபதம்; அதனால் - ஆதலால், இதழி பரந்தாமம் - கொன்றை மலராற்செய்த சிறந்த மாலையை, விடுத்துவிடுவாள் அலள் - விட்டுவிடுபவ ளல்லள், என - என்று, காசி - காசியிலெழுந்தருளி யிருக்கின்ற, வேதியர்க்கு - வேதங்களாற் புகழப்படுபவருக்கு, போய்—, விளம்புவீர் - சொல்லுங்கள், (எ-று.) (௬௩)

[நேரிசைவெண்பா.]

வேதத்துரகர்விரகவகிலேசர்
பாதத்துரகப்பரிபுரத்தார்—நாதரிவர்
சேவடிக்கண்டாரேதிறம்பிழைத்துத்தென்புலத்தார்
கோவடிக்கண்டாரேகுலைந்து.

(இ-ள்.) வேதத்துரகர் - வேதங்களாகிய குதிரைகளையுடையவரும், விரக அகிலேசர் - உபாயத்தையுடைய விசுவநாதரும், பாதத்து உரகம் பரிபுரத்தார் - காலிற் பாம்பாகிய சிலம்பை யணிந்தவருமாகிய, நாதரிவர் - தலைவருடைய, சேவடி - சிவந்த திருவடிகளை, கண்டாரே - பார்த்தவர்களே, திறம் பிழைத்து - (தமது) சாமர்த்தியத்தினல் தப்பி, குலைந்து - ஒழுங்குகெட்டு, தென் புலத்தார் கோ - பிதிரருக்குத் தலைவனாகிய யமனை, அடிகண்டார் - கீழே கண்டவர் [வென்றவரென்றபடி], (எ-று.)

வேதங்களிற் பிரதிபாதிக்கப்படுதலால் வேதத்துரக ரென்றும், அடியவர்க்கெளிமையு மமரர்கட் கருமையுமாகிய உபாயத்தை யுடைமையால் விரகவகிலேச ரென்றும், சர்ப்பாபரண முடைமையாற் பாதத்துரகப் பரிபுரத்தா ரென்றுங் கூறினர். பித்ருபதி யென்னும் வடமொழிப் பெயர்க்கேற்பத் தென்புலத்தார்கோ வென்றார். உலகத்தாரை யடிக்காணு மவனைத் தாமடிக் காண்டலால், திறம் பிழைத்தென்றுங் குலைந்தென்றுங் கூறினர். சேவடிக் கண்டார், காண்டல் - இடைவிடாது நினைத்தல். (௬௪)

[கட்டளைக்கலித்துறை.]

குலைவளைக்கும்பழுக்காய்முழுத்தாறுகொழுங்கமுகின்
தலைவளைக்கும்பொழிற்காசிப்பிரான்றடங்கோட்டுப்பைம்பொன்
மலைவளைக்கும்புயத்தாண்மையென்னுந்தெவ்வளைந்துகழைச்
சிலைவளைத்துத்தன்படைவீடமர்க்களஞ்செய்திடினே.

(இ-ள்.) தெவ்வளைந்து - பகைவனாகிய மன்மதன் சூழ்ந்துகொண்டு, கழை சிலை வளைத்து - கருப்பு வில்லைவளைத்து, தன்படை வீடு - தன்னுடைய ஆயுதசாலையை, அமர்களம் - யுத்த ஸ்தானமாக, செய்திடின் - செய்தால், குலைவளைக்கும் - குலை தள்ளின, பழுக்காய் முழுத்தாறு - பழுக்காய்களையுடைய பெரிய குலைகள், கொழு கமுகின் - செழித்த பாக்கு மரத்தினது, தலை வளைக்கும் - முடியை வளையச்செய்கின்ற, பொழில் - சோலையையுடைய, காசி பிரான் - காசி நாதரது, தடகோடு பைம்பொன் மலைவளைக்கும் புயத்து - பெரிய சிகரங்களையுடைய பசிய மேருமலையை (வில்லாக) வளைத்த தோள்களினது, ஆண்மை - வீரம், என் ஆம் - யாது பயனுடைத்தாகும்? (எ-று.)

நெற்றிக் கண்ணும், புன்னகையுமிருத்தலால், படைவீடென்றார். தனது நெற்றிக் கண்ணெருப்பால் உடல் நீறுக்கப்பட்டு வெல்லப்பட்டு அநங்கனுக்

கப்பட்டவன், மீண்டும் அச்சமின்றி முன்போலத் தனது ஆயுத சாலையைச் சார்ந்து தன்னையடைந்தவர்க்குந் தனக்கும் வேதனையை யுண்டாக்கி அதனைப் போர்க்களமாகச் செய்வானாயின், அவனை அவ்வாறு வென்றதனாலாய பய னென்கொ லென்றபடி. தடங்கோட்டுப் பைம்பொன் மலைச்சிலைக்குக் கழைச் சிலையோ நிகரொன்க. ஆயிரங் கொடுமுடியை யுடைத்தாயிருத்தலால், தடங் கோட்டு மலையென்றார்.

[சந்தத்தாழிசை.]

இடமருங்கினின் மருங்கிலாதவள் குடியிருக்கவு முடியில்வேறிவளொருத்தியையிருத்திவைத்துமதிமோகமோகினிரூபமாய், நடமிடிங்கிவண் மேலும்வைத்துளநயந்தொர்பிள்ளைபயந்தநீர்நங்குலத்திருவைமருவினின்றுபிறர்நாவளைக்கவிடமாகுமோ, குடமுடைந்தெனவானினங்கண் மடிமடைதிறந்துபொழிபாலொடுங் கொழுமடற்பொதியவிழ்ந்துகைதைசொரிசோறுமிட்டணிதிரைக்கையாற், கடல்வயிற்றினைநிரப்புகின்றசுரகங்கைகுண்டகழியா நெடுங்ககனநீள்குடுமிமதில்களேழுடையகாசிமேவுமகிலேசரே.

(இ-ள்.) ஆன் இனங்கள்-பசுக்கூட்டங்கள், குடம் உடைந்தது என-குடமுடைந்தாற்போல, மடிமடைதிறந்து - மடியாகிய மடையைத்திறந்து, பொழிபாலொடும் - சொரிகின்ற பாலுடனே, கைதை - தாழையானது, கொழுமடல் பொதி அவிழ்ந்து - செழித்த இதழ்களின் கட்டுவிரிந்து, சொரிசோறும்-பெய்கின்ற பராகமாகிய சோற்றையும், இட்டு - விருந்தாகக்கொடுத்து, அணிதிரைக்கையால் - அழகிய அலைகளாகிய கைகளினால், கடல்வயிற்றினை நிரப்புகின்ற - சமுத்திரத்தினது வயிற்றை நிறைக்கின்ற, சுரகங்கை - தேவகங்கையானது, குண்டு அகழியா - ஆழத்தையுடைய அகழியாக, நெடு ககனம் நீள் குடுமி மதில்கள் எழு உடைய - உயர்ந்த ஆகாயம் வரையிலு முயர்ந்திருக்கின்ற சிகரத்தையுடைய எழு மதில்களையுடைய, காசி - காசியில், மேவும் - எழுந்தருளியிருக்கின்ற, அகிலேசரே - விசுவநாதரே! இடமருங்கினில் - இடப்பக்கத்தில், மருங்கு இலாதவள் - இடையில்லாத பார்வதிதேவி, குடி இருக்கவும் - இருப்பாய்வசிக்கவும், முடியில் - தலையில், வேறு இவள் ஒருத்தியை - (அவளினும்) வேறாகிய இக்கங்கையாகிய பெண்ணை, இருத்திவைத்தும்- இருக்கச்செய்தும், அதிமோக மோகினி ரூபமாய் - மிக்க மோகத்தைத் தருகின்ற மோகனப் பெண்வடிவமாய், நடம் இடு இவள்மேலும் - கூத்தாடுகின்ற இப்பெண்ணினிடத்தும், இங்கு உளம் நயந்துவைத்து - இவ்வாறு திருவுள்ள முகந்துவைத்து, ஓர் பிள்ளை பயந்த நீர் - ஒருபிள்ளையைப் பெற்ற நீவிர், இன்று நம் குலம் திருவை - இப்பொழுது நம் வம்சத்திற்பிறந்த இப்பெண்ணை, மருவின் - தழுவினால், பிறர் - அயலார், நாவளைக்க-நாக்கைவளைத்து ஒருபழிச்சொல் பேச, இடம் - காரணம், ஆகுமோ - உண்டாகுமோ? [ஆகாது], (எ-று.)

உளம்வைத்து நயந்தென மாறுக. நாவளைத்தல் - காரணவாகுபெயர். பராகம் - பூந்துகள். அணிதிரைக்கையாலிட் டெனக்கூட்டுக. கற்பு நிறைந்த மனைவி தன் கணவனுக்குப் பாலுஞ்சோறு மன்போடிடுமாறுபோலக் கங்காநதி தன் கணவனாகிய சமுத்திர ராஜனுக்குப் பாலுஞ்சோறுமிட்டு வயிற்றினை நிரப்புகின்றனளென்றார். குண்டு அகழி - தாழ்ந்த அகழி. "குண்டுநீருறைகோளரீ," "குண்டுசுனைபூத்த வண்டு படுகண்ணி" என்றார் பிறரும். (௬௬)

[மடக்கு. பன்னிருசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.]

சரியோடொழுகுங்கரவளையேசரக்கோடொழுகுங்கரவளையேதை
யற்கனமேதீவிடமேதவழுங்கனமேதீவிடமே, சொரிவதடங்காக்கண்
ணீரேதுளிக்குந்தடங்காக்கண்ணீரேதுயரேவதிதனந்தினமேகூராற்கழு
த்தினநந்தினமே, கருகிப்புலர்ந்தநாவாயேகரைவந்திழியுநாவாயேகண்க
ளுறங்காக்கழுநீரேகடலேகழியேகழுநீரே, அரிவையிவளுக்குருகீரே
யனத்தோடுறங்குங்குருகீரேயளியாரிதழிவனத்தாரேயருளாநந்தவன
த்தாரே.

(இ-ள்.) சரக்கோடு ஒழுகும் கரம்வளையே - (முத்தாகிய) வியாபாரப் பொருளோடு ஓடுகின்ற கிரணத்தையுடைய சங்கமே! கரம்வளையே சரியோடு ஒழுகும் - கைவளையானது நேராய் [தடையின்றி] கீழேசிந்தும்; தவழும் கனமே - செல்கின்றமேகமே! தீவு இடமே - தீவுகளினிடமே! தையற்கு அனமே தீவிடமே - இப்பெண்ணிற்குச் சோறு கொடியவிஷத்தோடொப்பாகும்; தடம் காக்கண் துளிக்கும் நீரே - விசாலமான சோலைகளிற்றுளியாய் விழுகின்றசலமே! கணீர் ஏ அடங்காசொரிவது - (சோக) பாஷ்பமானது (தடைக்கு) அடங்காமல் வழிகின்றது; கூரல் கழுத்தின் நந்து இனமே - பிரம்புபோற் சிறிய கழுத்தையுடைய சங்கங்களின கூட்டமே! துயரே வதி தனம்தினமே - முலைகள் நாடோறுந் துன்பமதிகரிக்கப்பெறுவன்; கரை வந்து இழியும் நாவாயே - கடற்கரையில் வந்து தங்குகின்ற மரக்கலமே! நாவாயே கருகிபுலர்ந்த - நாக்கும் வாயும் கறுத்து உலர்ந்தன; கடலே - சமுத்திரமே! கழியே—! கழுநீரே - ஆம்பலே! கண்கள்கழுநீர் உறங்கா - கண்களாகிய செங்கழுநீர் மலர்கள் (ஒருபோதுந்) தூங்கமாட்டாவாம்; அனத்தோடு உறங்கும் குருகீரே - அன்னப்பறவைகளோடு தூங்குகின்ற நாரைகளே! அரிவை இவளுக்கு உருகீர் ஏ - இப்பெண்ணின் விஷயமாய் மனமுருகுங்கள்; அருள் ஆநந்தவனத்தாரே - கிருபையையுடைய காசியிலெழுந்தருளியிருப்பவர், இதழிவனம்தார் அருளாரே - அழகினையுடைய கொன்றைமலர் மாலையைக்கொடார், (எ-று.)

வளை, நந்து - இவை சங்குகளின் சாதிபேதம். பொருள்களை யிறக்குதலால், இழியுநாவாயென்றார். உறங்கா - பெயரெச்சமாய், கண்கள் இரவும் பகலுங் குவியாத கழுநீரிருந்தால் அவற்றை யொக்குமென்றுமாம். இது இரங்குதல் நெய்தற் றிணைக்குரிப்பொருளாதலால் அங்குள்ள பொருள்களைக் குறித்துச்சொல்லுதல். தையற்குஎன்பதைப் பலவிடத்துங் கூட்டுக. (கஎ)

[எழுசீர்க்கழிநெடில் ஆசிரியச்சந்தவிருத்தம்.]

வனத்தினுமொர்பொற்பொதுமுகப்பினுநினைப்பவர்மனத்தினுந
டித்தருள்செய்வார், சினக்கயல்விழிக்கடைகருக்கொள்கருணைக்கொடி
தினைத்தமருமத்தர்தமதிடமா, நனைக்கமலநெக்குடைதரக்குடைதுறை
ச்சுரநதிக்கரையின்முட்டைகொலனுக், கனத்தபருமுத்தினையணைத்த
னமினத்தொடுகளிக்குமவிமுத்தநகர்கருதீரே.

(இ-ள்.) சுரநதிதுறை - தேவகங்காநதியிடத்தில், கமலநனை - தாமரையரும்புகள், நெக்கு உடைதர - நெகிழ்ந்துமலர, குடை அனம் - அதனைத்துளைத்து வதிகின்ற அன்னப்புள், கரையில் கனத்த பருமுத்தினை - கரையிலுள்ள

மிகப்பருத்த முத்துக்களை, முட்டைகொல் எனு - தனது முட்டையோ வென்றுமயங்கி, அணைத்து - அவற்றைத்தழுவி, இனத்தொடுகளிக்கும் - தன்சுற்றத்தோடு மகிழ்கின்ற, அவிமுத்தநகர் - காசிநகரத்தை, வனத்தினும் - ஆநந்தவனத்திலும், ஓர் பொன்பொது முகப்பினும் - ஒப்பற்ற பொன்னம்பலத்திலும், நினைப்பவர் மனத்தினும் - அன்பால்நினைவாரது உள்ளத்திலும், நடித்து அருள் செய்வார் - நடநஞ்செய்தருளுபவரும், கருகொள் கருணைகொடி - கருமைநிறத்தைக்கொண்ட அருளையுடைய பார்வதியினது, சினம் கயல் விழிகடை - கோபத்தை யுடைய கெண்டைமீன்போன்ற கண்களின் நுனி, திளைத்தமருமத்தர் - அழுந்திய மார்பையுடையவருமாகிய சிவபெருமானது,இடமா - திருப்பதியாக, கருதீர் - நினையுங்கள், (எ-று.)

ஒவ்வொன்றுந் தனித்தனி இவ்வாறு செய்தலால் இனத்தொடு களிக்குமென்றார். அவ்வன்னங்கள் முத்துக்களைத் தம்முட்டைகளென்று மயங்கலால் மயக்கவணி. இனி,விழிக்கடைக் கொடிதிளைத்த வென்றுங்கூறலாம். கருக்கொள் என்பதனை விழிக்கு அடையாக்கலுமொன்று. இது விருத்தி யநுப்பிராசம்.

[இதுவுமது.]

கருமுகில்வெளுப்பவறவிருளுமளகத்தினிவள் கதிர்முலைமுகட்டணையவணைமீதே, வருகிலரெனிற்செவியிலொருமொழிசொலச்சமையம்வருகெனவழைக்கிலுடன்வருவார்காண், சுரநதிசுருட்டும்விரிதிரைகளொருமுத்திமகடுணைமுலைதிளைக்குமவர்மணநாளின்,முரசொடுமுழக்குகுடமுழவெனவிரைக்கவளை முரலுமவிமுத்தநகருடையாரே.

(இ-ள்.) சுரநதி - தேவ கங்கையினது, சுருட்டும் விரிதிரைகள் - சுருட்டுகின்ற பரந்த அலைகள், ஒரு முத்திமகள் - ஒப்பற்ற வீட்டுலகமாகிய செல்வியினுடைய, துணைமுலை - இரண்டாகிய தனங்களை, திளைக்குமவர் - அழுந்தத் தழுவு மவர்களுடைய, மணநாளில் - கல்யாண காலத்தில், முழக்கு - முழங்கச்செய்கின்ற, முரசொடு - முரஜ வாத்தியத் தோலியோடு, குடமுழவு என - குடமுழாவினொலிபோல, இரைக்க - ஒலிக்க, வளை முரலும் - சங்குகள் ஒலிக்கின்ற, அவிமுத்த நகர் உடையார் - காசி நாதர், கருமுகில் - கருமையையுடைய மேகம், வெளுப்ப - (தன் கருமைக்கு முன்) வெண்மை நிறத்தையடையும்படி, அற இருளும் - மிகவுங் கறுத்த, அளகத்தின் - கூந்தலையுடைய, இவள் - இப்பெண்ணினுடைய, கதிர் முலை - ஒளியமைந்த தனங்களினுடைய, முகடு - நுனியை, அணைய - தழுவ, அணைமீதே - படுக்கையின் மேலே, வருகிலரெனின் - வாராமற் போவாரானால், செவியில் - காதில், ஒரு மொழி சொல - ஒரு பேச்சைச்சொல்ல, சமையம் - (இப்பொழுது வாய்த்த) காலம்; வருகென - வருவீராகவென்று, அழைக்கில் - (தந்திரமாய்) அழைத்தால், உடன் வருவார் - உடனே வருவார், (எ-று.)

குடமுழா - கட வாத்தியம். (கக)

[நேரிசையாசிரியப்பா.]

உடைதிரைக்கங்கைநெடுநதித்துறையின்
வலம்புரியென்னவாங்கிடம்புரிதிங்கள்
வெள்ளிவீழென்னவிரிநிலாப்பரப்பும்
பொன்வீழன்னபுரிசடைக்கடவுள்

முடவுப்படத்தகடவுட்பைம்பூண்
கறங்கெனச்சுழலுங்கால்விசைக்காற்று
துமிழ்தருகுருதித்திரடெறித்தாங்குத்
திசைதொறுந்தெறித்ததிரண்மணிக்குலங்கள்
வானேறுகடுப்பவெரிநிற்றாக்கலுங்
கையெடுத்தெண்டிசைக்களிறும்வீரிடந்
தெய்வநாடகஞ்செய்வைதிகக்கூத்தன்
வளைபகப்பாயும்வானரக்குழாத்தொரு
கருமுகமந்திகால்விசைத்தெழுந்து
பழுக்காய்க்கமுகின் விழுக்குலைபறித்துப்
படர்தருதோற்றஞ்சுடரோன்செம்மல்
தசமுகத்தொருவன்றிரண்முடிபிடுங்கி
விசையிற்பாய்ந்தெனவிம்மிதமளிக்குந்
தடமலர்ப்படப்பைத்தண்டலைக்காசிக்
கடிநகர்புரக்குங்கண்ணுதற்செல்வன்
வேம்புங்கடுவுந்தேம்பிழியாகச்
செஞ்செவிகைப்பயான்றெரிந்தசின்மொழி
அஞ்செவிமடுத்தாங்களித்தனனதனால்
வேத்தவைவியப்பவிளைந்தேன்பில்கும்
தேந்தமிழ்தெளிக்குஞ்செந்நாப்புலவீர்
மண்மகள்கவிகைத்தண்ணிழலொதுங்கப்
பாரம்பூண்டிந்நிலந்திருவொடுபுரந்து
முடியினுமுடியாமுழுநலங்கொடுக்குஞ்
செந்நெறிவினவுதிராயினின்னிசைப்
பாத்தொடுத்துநந்தபாஞ்சடா
நாத்தழும்பிருக்கவேத்துமினீரே.

(இ-ள்.) திரை உடை - அலைகளையுடைத்தாகிய, நெடு - நீண்ட, கங்கை நதி - கங்காநதியினது, துறையின் - கரையில், வலம்புரிஎன்ன - வலம்புரிச் சங்குபோல, ஆங்கு - அவ்விடத்தில், இடம்புரிதிங்கள் - இடத்தைச்செய்து கொண்டிருக்கின்ற சந்திரனானவன், வெள்ளியிழைஎன்ன - வெள்ளியினாலாகிய கம்பியைப்போல, விரிநிலா - பரந்த காந்தியை, பரப்பும் - விரிக்கப்பெற்ற, பொன்வீழ் அன்ன - பொற்கம்பியையொத்த, புரிசடை - கட்டிய சடையினை யுடைய, கடவுள் - தேவன், முடவுபடத்த - வளைவினையுடைய படத்தையு டைய, கடவுள் - தெய்வத்தன்மையையுடைய, பைம்பூண் - பசிய ஆபரண மாகிய சர்ப்பங்கள், கறங்கென - காற்றாடிபோல, சுழலும் - சுற்றுவதனையு ண்டாகிய, கால்விசைக்கு - காற்றினது வேகத்திற்கு, ஆற்றாது - பொறு க்க மாட்டாமையால், உமிழ்தரு குருதிதிரள் - கக்குகின்ற இரத்தக்கூட் டம், தெறித்தாங்கு - சிதறினாற்போல, திசைதொறும் - திக்குக்கள் தோறும், தெறித்த - சிதறின, திரள் மணிகுலங்கள் - திரண்ட மாணிக்கங்களினது கூ ட்டங்கள், வானேறுகடுப்ப - சிறந்த இடியையொக்க, வெரிநில்தாக்கலும் - முதுகிற்பட்டவுடனே, எண்திசைகளிறும் - அஷ்டதிக்கஜங்களும், கை

யெடுத்து - (தமது) துதிக்கையைத்தூக்கி, வீரிட - பிளிற, தெய்வநாடகம் செய் - தெய்வத் தன்மையையுடைய திருநடனத்தைச் செய்கின்ற, வைதிகக் கூத்தன் - வேதங்களின் முடியி லடிவைத்தாடுகின்ற கூத்தினையுடையவன், வரைபகபாயும் மலை பிளவுபடும்படி தாவுகின்ற, வானரக்குழாத்து - குரக்குக் கூட்டத்தில், ஒரு கருமுகமந்தி - ஒரு கரிய முகத்தினையுடைய பெண் குரங்கு, கால் விசைத்து எழுந்து - கால்களால் உதைத்துக்கிளம்பி, பழுக்காய் கமுகின் - பழுத்த காய்களையுடைய பாக்கு மரத்தினது, விழு குலை - பெரிய குலையை, பறித்து - கொய்து, படர்தரு தோற்றம் - செல்லுகின்ற காட்சி, சுடரோன் செம்மல் - சூரியனது புத்திரனாகிய சுக்கிரீவன், தசமுகத்தொருவன் - பத்துத் தலைகளையுடைய இராவணனது, முடித்திரள் - கிரீட சமூகத்தை, பிடுங்கி - பறித்து, விசையின் - வேகத்தோடு, பாய்ந்தென-பாய்ந்தாற்போல, விம்மிதம் விளைக்கும் - அதிசயத்தை யுண்டாக்குகின்ற, தடமலர் - பெரிய பூக்களையுடைய, தண்டலை படப்பை - சோலையையுடைய நிலங்களையுடைய, காசி கடிநகர் - காசியென்னுங் காவலையுடைய நகரத்தை, புரக்கும் - காக்கின்ற, நுதல்கண் செல்வன் - நெற்றிக் கண்ணையுடைய செல்வத்தையுடையவன்; [சிவ பெருமான்], வேம்பும் கடுவும் தேன்பிழியாக - வேப்ப மரத்தினது இரசமும் விடமும் தேனினது சாரம்போலத் தித்திப்பினையுடையவாக, செம் செவிகைப்ப - அழகிய திருச்செவிகளுக்குக் கசக்கும்படி, யான் தொடுத்த சில் மொழி - அடியேன் விண்ணப்பஞ்செய்தசிலபேச்சுக்களை, அம்செவி மடுத்து - அழகிய காதுகள் நிறையக்கேட்டு, ஆங்கு - அவ்வாறு, அளித்தனன் - அருள் செய்தான்; அதனால்—, வேந்து அவை வியப்ப - அரசர் கூட்டம் அதிசயிக்கும்படி, விரைதேன் பில்கும் - வாசனையினையுடைய தேன்போன்ற இனிமை மிகுந்த, தேம்தமிழ் - இனிய தமிழ்ப் பாஷையை, தெளிக்கும் - தெளியச் செய்கின்ற, செம்நாபுலவீர் - நல்ல நாக்கினையுடைய பண்டிதர்களே! நீர் - நீவிர், மண் மகள் - பூமி, கவிகை தண்நிழல் துஞ்ச- வெண்கொற்றக் குடையினது குளிர்ந்த நிழலில் தங்கும்படி, புரவு பூண்டு - (சிலகாலம்) காவலைச்செய்து, (பின்) இந்திர திருவொடும் - இந்திரனுடைய செல்வம்போன்ற செல்வத்தோடு, பொலிந்து- விளங்கி, (பின்) முடிவினும் - யுகாந்தகாலத்திலும், முடியா-அழியாத, முழுநலம் - பேரின்பத்தை, கொடுக்கும் - தருகின்ற, செய்நெறி - நன்னெறியை, வினவுதிராயின்- கேட்பீராகில், இன்இசைபா தொடுத்து - இனிய ராகத்தையுடைய பாமாலையைத்தொடுத்து, அடுத்தபரஞ்சுடரை - பொருந்திய பரஞ்சோதிஸ்வரூபியாகிய சிவபெருமானை, நாதழும்பிருக்க—நாக்குத் தழும்பேறும்படி, ஏத்துமின் - துதியுங்கள், (எ-று.)

உடைதிரை - வினைத்தொகையாய், சிதறுகின்ற திரையென்றுமாம். கடுப்ப-உவமவுருபு. பழுக்காய்-முதற்கேற்றஅடை. ரிக்ஷரஜஸ் என்கிற வானரராஜனுக்குச் சூரியாம்சமாகப் பிறந்த பிள்ளையாதலின், சுடரோன் செம்மலென்றார்.

காசிக்கலம்பகம்முற்றிற்று.